# ஐதரேய உபநிஷதம்



(மிஞ்சும் அதிசயம்)

சுவாமி பிரபஞ்சநாதன்

ஓம் தத் சத்

# ஐதரேய உபநிஷதம்

தொகுப்பு



சுவாமி பிரபஞ்சநாதன்

# ஐதரேய உபநிஷதம்

===================

*மீஞ்சும் அதிசயம்!*

-----------------

*புறவுலகில் பல அதிசயங்களைக் காண்கிறோம். இவற்றுள் இயற்கை உருவாக்கிய அதிசயங்கள் சில, மனிதன் உருவாக்கிய அதிசயங்கள் சில. இதிலேயே நாம்சிந்தித்துப் பார்த்தால் ஒரு விஷயம் புரியும்!*

*மனிதன் உருவாக்கிய அதிசயங்கள் எத்தனைதான் இருந்தாலுமே கூட இயற்கையின் அதிசயங்களுக்கு முன்னால் அவை ஒன்றுமேயல்ல என்பதுதான் அது.*

*இயற்கையில் உள்ள ஜீவராசிகளில் பலப்பல அதிசயங்கள் உள்ளன. பச்சோந்தியின் உடல் நிறம் அது இருக்குமிடத்துக்கு ஏற்ப மாறுவது ஒரு அதிசயம்!*

*சில செடிகளுடைய கொடிகள் அபாயகரமாக அருகில் செல்லும் விலங்குகளைக் கவர்ந்திழுத்து சுற்றிப் பின் அவற்றை உணவாகக் கொள்வது.*

*சில மலர்கள் மனிதன், பூச்சிகள் போன்ற உருவ அமைப்பில் காணப்படுகின்ற அதிசயம்! ஆந்தைகளின் கண்கள் இருட்டில் தெரிவது. வௌவால்களுக்கு கண்களே இன்றி அவை புறஊதாக் கதிர்களின் மூலம் வேகமாக எதிரில் தெரியும் இடர்களை தவிர்த்துப் பறப்பது போன்ற அதிசயங்கள் இப்படிப் பல பல உள்ளன.*



*இவையனைத்தையும் மிஞ்சுகிற அதிசயம் ஒன்று உள்ளது.*

*அது மனித உடலில் நிகழ்கிறது. அதுவே உயிர் உருவாக்குதல், கருத்தரிப்பது முதல் உயிர் வளர்ந்து வெளியே வருவது வரை நடைபெறுகின்ற நிகழ்ச்சிகள் விந்தையிலும் விந்தையானவை.*

*ஐதரேய உபநிஷதம் இந்த அதிசயத்தை ஆராய்கிறது.*

*4 அத்தியாயங்களைக் கொண்ட இந்த உபநிஷதத்தின் ஒரு பகுதி இதனை விவரிக்கிறது.*

*மற்ற பகுதிகள் பிற உபநிஷதங்களைப் போல் உலகம், ஆன்மா, இறைவன் போன்ற கருத்துக்களைக் கூறுகிறது.*

*இந்தப் பதிவுகள் இந்த உபநிஷதம் குறித்த அற்புதமான விளக்க உரை நூலை எழுதிய ஶ்ரீ ராமகிருஷ்ணா மடத்தை சேர்ந்த சுவாமி ஆசுதோஷானந்தர் அவர்களின் நூலில் இருந்து தொகுத்து எழுதப்பட்டவை.*

*இந்த பதிவுகளின் முழுப் புகழும் சுவாமிஜி அவர்களையே சாரும்.*

*ஏதோ ஓரிரு இடங்களில் அடியேனின் சிந்தையில் தோன்றும் கருத்துக்களைக் கூறியுள்ளேன் அவ்வளவே!!*

*இந்த நூலில் வரும் மனித உயிர் ஜனிப்பது வளர்வது போல விஷயங்களைப் பற்றிய வர்ணனைகள் நமக்குப் பல விஷயங்களைப் புரிய வைக்கும்.*

*இன்னமும் அந்தக் காலத்தில் வரும் புராணக் கதைகளில் அபிமன்யு தாயின் வயிற்றில் இருந்து கொண்டு சக்ர வியூகத்தை உடைப்பது குறித்த பாடத்தை கண்ணனிடமிருந்து கேட்டான்.*

*பிரகலாதன் ஹரிபக்தியை நாரதர் தன்னுடைய தாயிடம் ஹரிநாம மகிமை குறித்து எடுத்துரைக்கையில் தாயின் வயிற்றில் இருந்து கொண்டே கேட்டான் என்பது போல விஷயங்களைப் படித்திருப்போம்.*



*இன்றைய மருத்துவ உலகம் கர்ப்பிணிப் பெண்களின் உடல் நலத்தைப் பேணும் அதே நேரம் அவர்களின் மன நலத்தையும் சரிவரப் பேண வேண்டும் என்று வலியுறுத்துவது இது போலக் காரணங்களை முன்னிட்டுதான்.*

*கர்ப்பிணிப் பெண்களின் ஒவ்வொரு நேர்மறை உணர்வுக்கும் அதே போல எதிர்மறை உணர்வுக்கும் கருவிலுள்ள சிசுவுக்கும் அதே போலத் தாக்கங்கள் உண்டாகும் என்பது தெளிவு!!*

*இந்த உபநிஷதமும் நமக்கு பல விஷயங்களில் நல்ல ஞானத்தைத் தரும் என்பதில் ஐயமில்லை!!*

***உபநிஷத விளக்கம்:***

---------------------

*ரிக் வேதத்தை சேர்ந்த ஐதரேய உபநிஷதம் ஐதரேய ஆரண்யகத்தின் 2 - ஆம் பகுதியில் 4 - 6 அத்தியாயங்களாக அமைந்துள்ளது.*

*இதனை அருளியவர் **"மஹீதாச ஐதரேயர்"** என்ற முனிவர் ஆவார்.*

*இங்கு 3 அத்தியாயங்களாக மொத்தம் 33 மந்திரங்கள் உள்ளன. அதில் முதல் அத்தியாயத்தில் கடவுள் உலகையும், மனிதனையும், உணவையும் படைத்தது பற்றி கூறப்படுகின்றது.*

*இரண்டாம் அத்தியாயத்தில் கடவுள் மனிதனுள் புகுந்து உயிர் உருவாதல் என்ற அதிசயச் செயலை நிகழ்த்துவது பற்றி விவரிக்கின்றது.*

*மூன்றாம் அத்தியாயத்தில் மனிதனில் ஆன்மாவாக விளங்குகின்ற பேருணர்வுப் பொருளே இறைவன் என்றும், அவரே பிரபஞ்சத்திலும் உள்ளார் என்ற கருத்தைக் கூறுகிறது.*

**"*ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம*"**

*என்ற மகா வாக்கியம் இந்த உபநிஷத்தில்தான் வருகின்றது.*

***இந்த உபநிஷத்தின் மையக்கரு:***

------------------------------------

*உயிர் உருவாகுதல் என்கின்ற அதிசயமே இந்த உபநிஷதத்தின் மையக்கருவாக உள்ளது.*

*தாயிலிருந்து உடம்பையும், தந்தையிலிருந்து உயிரையும் பெறுகின்ற மனிதனுள் இறைவன் ஆன்மாவாக புகுந்து அவனை இயங்க வைக்கின்றார் என்பதனை இந்த உபநிஷதம் 2 – 3 ஆம் அத்தியாயங்களில் விவரிக்கின்றது.*

***சாந்தி மந்திரம்:***

-----------------

*எந்த ஒன்றையும் செய்யும் பொழுது அதற்குரிய மன நிலை இருக்கவேண்டியது அவசியம்.*

*எந்தக்காரியத்தினை செய்கிறோமோ அதற்குரிய மன நிலையை வரவழைத்துக்கொண்டு, அதன் பிறகு அந்தச் செயலில் ஈடுபடுவது சிறப்பான பலனைக் கொடுக்கும்.*

*எப்படி ஒரு ஆலயத்தின் கருவறையில் உறைகின்ற இறைவனை வழிபடுவதற்கு முன்னால் நம்முடைய மனதின் எண்ணங்களை பக்திவழியில் திருப்புவதற்கு பலப்பல பிரகாரங்களை சுற்றி வருகிறோமோ அதே போல ஒரு உபநிஷதத்தை நாம் படிக்கும் முன் நாம் அதன் கருத்துக்களுடன் மனம் ஒன்றிப் படிக்க வேண்டியது தேவையாகிறது.*

*இல்லையென்றால் அதைப் படித்தும் பயனேதும் இல்லை.*

*ஏனென்றால் உபநிஷதங்களின் பொருள் மிக சூட்சமமானது. பலப்பல விதங்களில் சிந்தித்து அறிய வேண்டிய ஒன்று. அதனால்தான் அனுபூதிக் கருவூலமான உபநிஷதங்களைப் படிக்கப் புகும் முன்னால் நம் மன சிந்தனையை அதனுடன் இயைபுபடுத்த வேண்டி சாந்தி மந்திரங்கள் ஓதப்படுகின்றன.*

*உபநிஷதங்களின் உண்மைப் பொருளை வெறும் புலமையால் உணர முடியாது. பணிவுடனும் வழிபாட்டு உணர்வுடனும் அணுகும்போது மட்டுமே அதனைப் புரிந்து கொள்ள முடியும்.*

*அத்தகைய மனப்பான்மையை மனதில் கொள்வதற்காகவே இந்த சாந்தி மந்திரங்கள் ஓதப்படுகின்றன.*

***ஐதரேய உபநிஷதத்துக்கான சாந்தி மந்திரம்:***

---

***ஓம் வாங்மே மனஸி பிரதிஷ்ட்டிதா | மனோ மே வாசி பிரதிஷ்ட்டிதம் | ஆவிராவீர்ம ஏதி | வேதஸ்ய ம ஆணீஸ்த: | ச்ருதம் மே மா ப்ரஹாஸீ: | அனேனாதீதேனாஹோ ராத்ரான் ஸந்ததாமி | ரிதம் வதிஷ்யாமி | ஸத்யம் வதிஷ்யாமி| தன்மாவவது | தத்வக்தாரமவது | அவது மாமவது வக்தாரமவது வக்தாரம் |***

***ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||***

*பொருள்*

---

*எனது பேச்சு மனத்தில் நிலைபெறட்டும், மனம் பேச்சில் நிலைபெறட்டும். சுடரொளிப் பரம்பொருளே, என்னுள் ஒளிர்வாயாக.*

*மனம், பேச்சு ஆகிய இருவரும் வேதங்களின் உண்மையை எனக்குக் கொண்டு வருவீர்களாக. என்னால் கேட்கப்பட்டவை என்னை விட்டு விலகாதிருக்கட்டும். கற்றவற்றை பகலும் இரவும் நான் சிந்திப்பேனாக. நான் வியாவகாரிக*

*உண்மையை சொல்வேனாக, அந்த இறைவன் என்னைக் காக்கட்டும். குருவைக் காக்கட்டும். என்னைக் காக்கட்டும். குருவைக் காக்கட்டும்.*

*உயர் உண்மையை நாடுபவர்களுக்கு சிந்தனையும் பேச்சும் ஒன்றாக இருப்பது மிகவும் அவசியம்.*

*சாதாரண வாழ்க்கையிலும் '**உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவோர் உறவு கலவாமை வேண்டும்**' என்று பிரார்த்திக்கிறார் வள்ளலார். உள்ளும் புறமும் ஒன்றாக இருக்கின்ற நிலையைப் பிரார்த்திக்கின்ற மந்திரம் இது.*

# *அத்தியாயம் – 1*

*(பகுதி – 1)*

***அவர்தான் படைத்தார்:***
**********************************

*படைப்பு பற்றி பொதுவாக எல்லா உபநிஷதங்களும் ஆராய்கின்றன.*

*வெளி, காற்று, நெருப்பு, நீர், பூமி என்ற ஐந்தும் (பஞ்ச பூதங்கள்) படைப்பிற்கு அடிப்படை என்கிற அளவில் அனைத்து உபநிஷதங்களும் ஒத்திருகின்றன.*

*ஆனால் படைப்பு என்ற நிகழ்ச்சியைப் பற்றி ஒவ்வொரு உபநிஷதமும் ஒவ்வொரு கோணத்தில் கூறுகிறது. ஐதரேய உபநிஷதத்தின் கருத்தை இங்கே காண்கிறோம்.*

***ஓம் || ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீன்னான்யத் கிஞ்சனமிஷத் | ஸ ஈக்ஷத லோகான்னு ஸ்ருஜா இதி** (1)*

*பொருள்:*

*---------*

*ஆரம்பத்தில் கடவுள் ஒருவர் மட்டுமே இருந்தார். இமைக்கின்ற வேறு எதுவும் அப்போது இல்லை.*

*‘**நான் உலகங்களைப் படைப்பேன்**’ என்று அவர் நினைத்தார்.*

*படைப்பின் ஆரம்பம் பற்றி இங்கே கூறப்படுகிறது. உயிரினங்கள் எதுவும் அப்போது இல்லை. உயிரினங்கள்தான் ‘**இமைப்பவை**’ என்று இங்கே குறிப்பிடப்பட்டுள்ளன. வேறு எதுவும் இல்லாத அந்த ஆரம்பத்தில், உலகங்களைப் படைக்க வேண்டும் என்று கடவுள் நினைத்தார்.*

*(இந்த இடத்தில் இறையியல் பற்றிக் கொஞ்சம் விசாரம் செய்ய வேண்டியுள்ளது. இறையியலின் ஆரம்பமே மனித மனத்தின் தேடல்தான்.)*

*மனிதனுக்குப் பெரிய புதிராக இருப்பது தான் யார், தான் ஏன் இங்கு இருக்கிறோம், தான் பிறக்கும் முன்னர் எங்கு என்னவாக இருந்தோம், தான் இறந்த பின் என்னவாகி எங்கு செல்வோம் என்பதே!!*

*இவற்றுக்கு விடையைக் கண்டுபிடிக்க இதுவரை எந்த விஞ்ஞானியாலும் இயலவில்லை.*

**'பிக் பேங்'** *(Big Bang) நிகழ்ந்தது பிரபஞ்சம் விரிந்தது, இன்னமும் விரிந்து கொண்டேயிருக்கிறது என்றெல்லாம் சொல்கின்றவர்களுக்கு அதற்கு முன்னால் என்ன இருந்தது, அது எப்படி இங்கே வந்தது என்றெல்லாம் விளக்கத் தெரியவேயில்லை.*



*சரி உயிரினம் என்ற ஒன்று உருவானதற்கு நுண்ணுயிரி முதல் மனிதன் வரை பரிணாமக் கொள்கை சொன்னவர்களுக்குக் கூட அந்த நுண்ணுயிரியை யார் படைத்தார்கள் என்று சொல்லத் தெரியவில்லை!!*

*இந்தப் பிரபஞ்சத்தைப் போல ஒரு மாடல் வேண்டுமானால் விஞ்ஞானிகளால் தயாரிக்க இயலும்.*

*ஆனால், இதே போல இன்னொரு பிரபஞ்சத்தை உருவாக்கிட இயலுமா??*

*இவையெல்லாம் தான் பிரபஞ்சம் மற்றும் இறையியல் குறித்த ஆய்வுகளுக்கு ஆதாரமாக உள்ளன!!*

*பல உலகங்கள்:*

---------------

***ஸ இமான் லோகானஸ்ருஜத: | அம்போ***
***மரீசிர்மரமாபோஅதோஅம்பா:***
***பரேண திவம் த்யௌ: ப்ரதிஷ்ட்டாஅந்தரிக்ஷம் மரீசய: | ப்ருதிவீ***
***மரோ யா அதஸ்தாத்தா ஆப: (2)***

*பொருள்:*

---------

*அம்பலோகம், மரீசிலோகம், மரலோகம், ஆபலோகம் ஆகிய உலகங்களைக் கடவுள் படைத்தார்.*

*அம்பலோகம் சொர்க்கலோகத்திற்கு மேலே உள்ளது. அம்பலோகத்திற்கு சொர்க்கம் ஆதாரமாக உள்ளது.*

*மரீசிலோகம் ஒளியுலகங்கள் நிறைந்த இடைவெளியாகும்.*

*மரலோகம் என்பது பூமி.*

*பூமிக்குக் கீழே உள்ளது ஆபலோகம்.*

*புராணங்களில் 14 உலகங்கள் பற்றிய கருத்து வருகிறது.*

*அதற்கு மூலமாக உள்ளது இந்த உபநிஷதக் கருத்து.*

*5 உலகங்கள் இங்கே கூறப்பட்டுள்ளன.*

***1 அம்பலோகம்:***

----------------

‘**அம்பஸ்**’ *என்றால் தண்ணீர். அம்பலோகம் என்றால் தண்ணீர் உலகம். இது சொர்க்கத்திற்கு மேலே உள்ள உலகம். தொலைதூரத்திலிருந்து வானம் நீலக்கடலைப் போலத் தெரிவதாலோ, அல்லது மழை வானிலிருந்து வருகிறது என்ற சாதாரண நம்பிக்கையின் காரணமாகவோ, மிகவுயர்ந்ததான அம்பலோகம் தண்ணீர் நிறைந்ததாகக் கூறப்படுகிறது.*

*2 சொர்க்க லோகம்:*

---

*புராணங்கள் இதனை ஸூவர்லோகம் என்கின்றன. தேவர்கள் வாழும் உலகம் இது.*

*3 மரீசி லோகம்:*

---

*'**மரீசி**' என்றால் ஒளி. பூமிக்கு மேலே உள்ள இடைவெளி சூரிய கிரணங்களால் ஒளிமயமாக இருப்பதால் இந்தப் பெயரில்அழைக்கபட்டிருக்கலாம்.*

*4 மரலோகம்:*

---

*'**மரம்**' என்றால் மரிப்பவர்கள், அதாவது இறப்பவர்கள், மனிதர்கள். மனிதர்கள் வாழ்கின்ற பூமி.*

*5 ஆபலோகம்:*

---

*'**ஆப**' என்றால் தண்ணீர். பூமிக்குக் கீழே இருப்பதாகக் கருதப்படுகிற பாதாளலோகம், கடல்நீர் கீழ் உலகங்கள் வரை பரந்துள்ளது என்ற கருத்தில் தண்ணீர் உலகம் என்று கூறப்பட்டிருக்கலாம்.*

*(இறைவனே இந்த உலகங்களைப் படைத்தார் என்பது நமது வேத உபநிஷதங்களின் ஆதாரக் கருத்தாக உள்ளது.)*

*ஆனால் விஞ்ஞானம் எப்போதுமே இதை ஏற்றதில்லை. ஆனால் விஞ்ஞானத்தால் மனிதன், பிரபஞ்சம் போன்ற பலவற்றின் படைப்பு குறித்துக் கண்டறிய முடியாத காரணத்தால் இன்றைக்கு இறையறிவியல் (METAPHYSICS) போன்ற புதிய கொள்கைகள் மேலை நாடுகளில் உருவாகி உள்ளன.*

***இழைக் கொள்கையும் இறையியலும்:***

*************************************************************

*இனி சற்றே விலகி, நவீன இறையறிவியல் குறித்த சில விஷயங்களைப் பகிர்ந்து கொள்ளலாம்.*

*இதற்கு முன்பு பல உலகங்களை இறைவன் படைத்தது குறித்துக் கண்டோம். ஆரம்பத்தில் மேலை நாடுகளில் இருந்த விஞ்ஞான மனப்பான்மை காரணமாக கடவுள் நம்பிக்கை அற்றுப் போயிருந்தது. ஆனால் இன்றைக்கு அவர்கள்* **'கடவுள் துகள்'** *குறித்த ஆராய்சிகள் செய்வதை நாமும் அறிவோம்.*



*இந்த நிலையில் நவீன இயற்பியல், பிரபஞ்சவியல் கொள்கைகளின் அடிப்படைகளைக் கொஞ்சம் கவனிக்கலாம்.*

*மேலை நாடுகளில் இப்பொழுது இழைக் கொள்கை (STRING THEORY) என்ற ஒன்று வழங்கப்படுகிறது.*

*இது என்ன? இது எதைப் பற்றிக் கூறுகிறது?*

*இழைக் கொள்கை பிரபஞ்சத்தில் உள்ள எல்லாவற்றையும் பற்றிக் கூறுகிறது.*

*அப்படியானால் மனிதர்கள், பிரபஞ்சம், மிருகங்கள், பறவைகள் குறித்து அது தனித்தனியாக அது ஏதோ சொல்கிறது என்று எண்ண வேண்டாம். அது அப்படியல்ல. அது எல்லாவற்றையும் ஒன்றாகவே சொல்கிறது.*

*இது பிரபஞ்சத்திலுள்ள அனைத்துமே செல்களின் இழைகளால் ஆன நூல் போன்ற ஒன்றுதான் என்று சொல்கிறது. பிரபஞ்சத்தில் உள்ள எல்லாவற்றிலும் செல்கள் ஏதேதோ அதற்கேயுரிய இழைப்பின்னல்களால் இணைக்கப்பட்டிருக்கும்.*

*அவ்வளவே. மிக எளிமையான தத்துவம்.*

*ஆனால் இதன் இயற்பியல் பகுதி இன்னும் கொஞ்சம் ஆழமாக செல்கிறது.*

*நாம் உலகிலுள்ள அனைத்தையும் முப்பரிமாண வடிவில் காண்கிறோம்.*

*அதையே X AXIS, Y AXIS மற்றும் Z AXIS என்றும் கூறுகிறோம். உலகின் தலை சிறந்த விஞ்ஞானியான ஐன்ஸ்டீன் நான்காவதாகக் காலமும் (TIME) ஒரு பரிமாணம் என்று கண்டறிந்தார்.*

*ஆனால் இந்த இழைக் கொள்கையோ அதையும் தாண்டி பிரபஞ்சத்தில் எது இருந்தாலும் அது மொத்தத்தில் பத்து பரிமாணங்களுக்குள் மட்டுமே அடங்கக் கூடியது என்று கூறுகிறது.*

*முதலில் சொன்ன நான்கு போக மீதம் உள்ளவை:*

*5. மின்சாரம் (ELECTRICITY),*
*6. காந்தப் புலம் (MAGNETIC FIELD),*
*7. மனிதப் பிரக்ஞை (HUMAN CONSCIOUSNESS),*
*8. முடிவுறாப் பிரக்ஞை (INFINITE CONSCIOUSNESS),*
*9. இருப்புத் தன்மை (BEINGNESS),*
*10. மூலப் படைப்பாளரின் பிரக்ஞை (CONSCIOUSNESS OF THE ORIGINAL CREATOR).*

*இதில் மனிதப் பிரக்ஞை என்பதை மனித உணர்வாகவும், முடிவுறாப் பிரக்ஞை என்பதை மனித ஆன்மாவாகவும், இருப்புத் தன்மை என்பதை இந்தப் பிரபஞ்சத்தின் இருப்பாகவும் (INERTIA OR EXISTENCE) மற்றும் மூலப் படைப்பாளரின் பிரக்ஞை என்பதைப் '**பரமாத்மா**' எனறும் நாம் கொள்ளலாம்.*

*அவை அந்த அர்த்தத்தில் தான் சொல்லவும் பட்டுள்ளன!!*

*இனி உபநிஷத்திற்குள் வரலாம்...*

***காவலர்களைப் படைத்தார்:***
*----------------------------*

***ஸ ஈக்ஷதேமே நு லோகா லோகபாலான்னு ஸ்ருஜா இதி |***
***ஸோஅத்ப்ய ஏவ புருஷம் ஸமுத்ருத்த்யாமூர்ச்சயத்** (3)*

*பொருள்:*
*---------*

***'உலகங்களைப் படைத்து விட்டேன். இனி உலகங்களின் காவலர்களைப் படைப்பேன்'** என்று கடவுள் நினைத்தார்.*

*பிறகு தண்ணீரிலிருந்தே திரட்டி பிரம்ம தேவனை உருவாக்கினார்.*

பிரம்மதேவன் என்பவர் அனைத்து உயிரினங்களின் மொத்தத் தொகுதி ஆவார். அவரிலிருந்தே படைப்பு ஆரம்பமானது.

**‘தண்ணீர்’** என்பது ஐந்து அடிப்படை மூலங்களையும் குறிக்கிறது. நிலம், நீர், போன்ற அடிப்படை மூலங்களிலிருந்து பிரம்மதேவன் உருவாக்கப்பட்டார்.

பிரம்மதேவன் உயிரினங்களின் தொகுதி. எனவே மனிதனும் மற்ற உயிரினங்களும் ஐந்து அடிப்படை மூலங்களிலிருந்து உருவாகியவர்கள் என்று இந்த மந்திரம் கூறுகிறது.

தமப்யதபத் தஸ்யாபி தப்தஸ்ய முகம் நிரபித்யத யதாண்டம் |
முகாத் வாக் வாசோஅக்னிர்நாஸிகே நிரபித்யேதாம்
நாஸிகாப்யாம் ப்ராண: |
ப்ராணாத் வாயுரக்ஷிணீ நிரபித்யேதாமக்ஷிப்யாம் சக்ஷுச்சசக்ஷு
ஆதித்ய: கர்ணௌ நிரபித்யேதாம் கர்ணாப்யாம் ச்ரோத்ரம்
ச்ரோத்ராத் திசஸ்த்வங் நிரபித்யத த்வசோ லோமானி
லோமப்ய ஓஷதிவனஸ்பதயோ ஹ்ருதயம் நிரபித்யத
ஹ்ருதயான்மனோ மனஸச்சந்த்ரமா நாபிர்நிரபித்யத நாப்யா
அபானோஅபானான் ம்ருத்யு: சிச்னம் நிரபித்யத சிச்னாத்
ரேதோ ரேதஸ ஆப: (4)

பொருள்:
---------

கடவுள் பிரம்மதேவனைப்பற்றி சிந்தித்தார்.

*அப்போது பிரம்மதேவனின் வாய், முட்டை பிளப்பது போல், பிளந்தது.*

*வாயிலிருந்து பேச்சு வந்தது. பேச்சிலிருந்து நெருப்பு வந்தது.*

*மூக்கு தோன்றியது. மூக்கு பிளந்தது. மூக்குத் துவாரங்களிலிருந்து மூச்சு வந்தது. மூச்சிலிருந்து காற்று தோன்றியது.*

*கண்கள் தோன்றின. கண்கள் பிளந்தன. அவற்றிலிருந்து பார்வை வந்தது. பார்வையிலிருந்து சூரியன் தோன்றினான்.*

*காதுகள் தோன்றின. அவை பிளந்த போது கேட்கும் தன்மை உண்டாயிற்று. அதிலிருந்து திசைகள் தோன்றின.*

*தோல் உண்டாகியது. தோல் பிளந்து முடிகளும், முடிகளிளிருந்து மூலிகைகளும் செடிகளும் தோன்றின.*

*இதயம் தோன்றியது. இதயம் தோன்றிய போது மனமும், மனத்திலிருந்து சந்திரனும் தோன்றின.*

*தொப்புள் தோன்றியது. பிளந்த தொப்புளிலிருந்து அபானனும் அபானனிலிருந்து மரணமும் தோன்றியது.*

*குறி தோன்றியது. பிளந்த குறியிலிருந்து விந்துவும், விந்திலிருந்து தண்ணீரும் உண்டாயிற்று.*

*பிரம்மதேவனிடமிருந்து உலகமும் உயிரினங்களும் தோன்றியதை இந்த மந்திரம் கூறுகிறது.*



*நெருப்பு, சூரியன், சந்திரன், செடிகொடிகள் ஆகிய உலகின் பல்வேறு அம்சங்கள் உலகம் படைக்கப்பட்டது என்பதைக் காட்டுகிறது.*

*அது போலவே, உடல் மற்றும் மனத்தின் பல்வேறு அம்சங்கள் உயிரினங்கள் படைக்கப்பட்டன என்பதைக் காட்டுகிறது.*

***இவ்வாறு ஐதரேய உபநிஷதத்தின் முதல் அத்தியாயத்தின் முதல் பகுதி நிறைவுறுகிறது.***

*(பகுதி - 2)*

*கடலில் விழுந்தனர்:*
*******************************

*உலகம் அதாவது இயற்கையும் மனிதனும் படைக்கப்பட்டது பற்றி முதல் அத்தியாயத்தில் கண்டோம். இங்கே அவை ஒன்றுக்கொன்று சார்ந்து வாழ்கிற தன்மையைப் பற்றிப் பேசப்படுகிறது.*

***தா ஏதா தேவதா: ஸ்ருஷ்ட்டா அஸ்மின் மஹத்யர்ணவே ப்ராபதன் | தம் அசனாபிபாஸாப்யாம் அன்வவார்ஜத் | தா எனமப்ருவன்னாயதனம் ந: ப்ரஜானீஹி யஸ்மின் ப்ரதிஷ்ட்டிதா அன்னமதாமேதி (1)***

*பொருள்:*
---------

*படைக்கப்பட்ட உயிரினங்கள் இந்தப் பெரிய கடலில் விழுந்தார்கள். பிரம்மதேவன் அவர்களைப் பசி தாகத்திற்கு உள்ளாக்கினார். '**நாங்கள் தங்கி, உணவை உண்பதற்கு எங்களுக்கு ஓர் இடத்தைக் காட்டுங்கள்**' என்று அவர்கள் பிரம்மதேவனிடம் கேட்டார்கள்.*

*படைப்பு பற்றிய விளக்கம் தொடர்கிறது.*

*படைக்கப்பட்டவர்களிடம் பசி மற்றும் தாக உணர்ச்சியை ஏற்படுத்தினார் பிரம்மதேவன். அவர்கள் கடலில் வீழ்ந்தார்கள்.*

*எந்தக் கடலில்?*

*'**வாழ்க்கைக் கடலில்**' என்று இதற்கு அற்புதமான விளக்கம் தருகிறார் ஸ்ரீசங்கரர். அவர் கூறுகின்ற ஒவ்வொரு வாக்கியமும் பல முறை படித்து, ஆழ்ந்து சிந்திக்க வேண்டியது. ஒவ்வொரு வார்த்தையும் ஆழமான பொருள் நிறைந்தது.*

*அதன் திரண்ட பொருளை இங்கே தருகிறோம்:*

*'அது வாழ்க்கை என்னும் பெரிய கடல். அறியாமை, ஆசி, செயல்கள் ஆகியவற்றின் காரணமாக எழுகின்ற துக்கமே அந்தக் கடலிலுள்ள தண்ணீர்.*

*கொடிய நோய், மூப்பு, மரணம் ஆகிய பயங்கர ஜந்துக்கள் அந்தக் கடலில் உலவுகின்றன.*

*ஆரம்பமோ, முடிவோ, எல்லைகளோ இல்லாமல் அந்தக் கடல் பரந்து கிடக்கிறது. இளைப்பாறுவதற்கு ஒரு இம்மியளவு இடம் கூட அங்கு இல்லை.*

*உலகத்துடன் தொடர்பு கொண்டு, புலன்கள் கொண்டு வருகிற அற்ப சுகங்களே ஏதோ*

*ஆறுதலாக உள்ளன. ஆயிரமாயிரம் தீமைகள் அலைகளாகச் சுழன்று அடிக்கின்றன.*

*உலக இன்பங்களை அனுபவிப்பதற்கான தாகம் அந்த அலைகளின் வேகத்தைக் கூட்டுகிறது. அந்த அலைகளால் அடியுண்டு உயிரினங்கள்* ***'ஐயோ ஐயோ'*** *என்று அலறி எழுப்புகின்ற கூக்குரல் எங்கும் நிறைந்துள்ளது.*

*இந்த அவலங்கள் போதாதென்று அவர்கள் சில வேளைகளில் நரகத்திலும் தள்ளப்படுகிறார்கள்.*

*ஆனாலும், இந்த வாழ்க்கைக் கடலைக் கடப்பதற்கு ஒரு தோணி உள்ளது.*

*உண்மை, நேர்மை, தானம், கருணை, அஹிம்சை, புலனடக்கம், சுயக்கட்டுப்பாடு, பொறுமை ஆகியவை அதன் துடுப்புக்களாக உள்ளன.*

***பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்***
***இறைவனடி சேராதார். - குறள்***

*தூயவர்களின் தொடர்பும் தியாகமும் அந்தத் தோணி செல்லும் பாதையாக உள்ளது.*

*அந்தத் தோனியில் ஏறிச் சென்றால் மறுகரையாகிய மீண்டும் பிறப்பற்ற நிலையை அடையலாம்.*

*படைக்கப்பட உயிரினங்கள் பசி, தாகம் போன்ற தேவைகளும் துன்பங்களும் நிறைந்த வாழ்க்கையைப் பெற்றார்கள் என்பது கருத்து.*

*மனிதனில் புகுந்தனர்:*
*******************************

***தாப்யோ காமானயத் தா அப்ருவன்ன வை நோஅயமலமிதி|***
***தாப்யோ அச்வ்மானயத் தா அப்ருவன்ன வை நோஅயமலமிதி***
*(2)*

*பொருள்:*
---------

*பிரம்மதேவன் அவர்களுக்கு ஒரு பசுவைக் கொண்டுவந்தார். '**இது எங்களுக்குப் போதாது**' என்று அவர்கள் கூறினார்கள். அவர் ஒரு குதிரையைக் கொண்டு வந்தார். அதற்கும் அவர்கள், '**இது எங்களுக்குப் போதாது**' என்று கூறினார்கள்.*

***தாப்ய: புருஷமாயைத் தா அப்ருவன் ஸுக்ருதம் பதேதி***
***புருஷோ வாவ ஸுக்ருதம் | தா அப்ரவீத் யதாயதனம்***
***ப்ரவிசதேதி ( 3 )***

*பொருள்:*
---------

*பிறகு பிரம்மதேவன் அவர்களுக்காக ஒரு மனிதனைக் கொண்டு வந்தார். அவனைக் கண்டதும் அவர்கள்,*

*‘ஆகா! இவன் மனிதன். நிச்சயமாக இவன் சிறப்பாகப் படைக்கப்பட்டவன்’ என்று கூறினார்கள்.*

*அவர்களிடம் பிரம்மதேவன் ‘அவரவர்க்கு உரிய இடங்களில் புகுந்து கொள்ளுங்கள்’ என்றார்.*

*அக்னிவாத்பூத்வா முகம் ப்ராவிசத் வாயு: ப்ராணோ பூத்வா நாஸிகே ப்ராவிசத் ஆதித்யச்சக்ஷுர்பூத்வா அக்ஷிணீ ப்ராவிசத் திச: ச்ரோத்ரம் பூத்வா கர்ணௌ ப்ராவிசன் ஓஷதிவனஸ்பதயோ லோமானி பூத்வா த்வசம் ப்ராவிசம்ச்சந்த்ரமா மனோ பூத்வா ஹ்ருதயம் ப்ராவிசன் ம்ருத்யுரபானோ பூத்வா நாபிம் ப்ராவிசதாபோ ரேதோ பூத்வா சிச்னம் ப்ராவிசன் (4)*

*பொருள்:*

*---------*

*நெருப்பு பேச்சாகி வாயில் புகுந்தது. காற்று பிராணனாகி மூக்கில் புகுந்தது. சூரியன் பார்வையாகிக் கண்களில் புகுந்தது. திசைகள் கேட்கும் தன்மையாகிக் காதுகளில் புகுந்தது. மூலிகைகளும் செடிகொடிகளும் முடிகளாகி தோலில் புகுந்தன. சந்திரன் மனமாகி இதயத்தில் புகுந்தது. மரணம் அபானனாகி தொப்புளில் புகுந்தது. தண்ணீர் விந்துவாகி குறியில் புகுந்தது.*

*(2 மற்றும் 3 ஆம் ஸ்லோக வரிகள் குறித்துக் கொஞ்சம் பார்க்கலாம்.)*

*இதன் சூட்சமப் பொருள் என்னவாக இருக்கும்?*

*உயிரினங்கள் வாழ்க்கை என்னும் கடலில் மிதக்க விடப்பட்டன. அவைகளுக்கு பசியும், தாகமும் இருந்தது. ஆனால் பசியை அடக்க வழியில்லை. தாகம் தணிக்க வழியில்லை.*

*இது ஏன்?*

*இதன் உட்பொருளாக தோன்றுவது, உயிரினங்கள் என்ற ஒன்று படைக்கப்பட்டதே தவிர அவற்றுக்கு உடல் அல்லது உருவம் எதுவும் கொடுக்கப்படவில்லை. ஆனால் உணர்வுகள் கொடுக்கப்பட்டன.*

*பசி உண்டு ஆனால் வயிறில்லை, உணவில்லை !! தாகம் உண்டு ஆனால் அருந்த நீரில்லை, அருந்தும் நீர் போகக் குடலில்லை!! இதை இன்னமும் நுண்மைப் படுத்திப் பார்த்தால் உயிரினங்களாக ஆத்மாக்களும், அவற்றுடன் இணைந்த மனங்களும், அவற்றுடன் இணைந்த உணர்வுகளும் மட்டுமே படைக்கப்பட்டன என்று பொருள் கொள்ளலாம்.*

*உடல் என்ற ஒன்று கடைசியில்தான் படைக்கப்பட்டது. அந்தந்த மனதின் அறிவு நிலைக்கேற்ப* ***(இப்படித்தான் ஓரறிவு முதல் ஆறறிவு வரையுள்ள உயிரினங்கள் படைக்கப்பட்டன என்றும் கொள்ளலாம்)*** *அவற்றுக்கு உடல்கள் கொடுக்கப்பட்டன என்று கருதலாம்.*

*பசியும் தாகமும்:*

**************************

*தமசனயாபிபாஸே அப்ருதாமாவாப்யாம் அபிப்ரஜானீஹீதி |
தே அப்ரவீதேதாஸ்வேவ வாம் தேவதாஸு ஆபஜாமி
ஏதாஸு பாகின்யெள கரோமீதி | தஸ்மாத் யஸ்யை தஸ்யை ச
தேவதாயை ஹவிர்க்ருஹ்யதே பாகின்யாவேவ அஸ்யாம்
அசனாயாபிபாஸே பவத: (5)*

*பொருள்:*

---------

*பசியும் தாகமும் பிரம்மதேவனை அணுகி, '**நாங்கள் இருவரும் தங்குவதற்கு ஒரு இடத்தைத் தெரிவியுங்கள்**' என்று கேட்டுக் கொண்டன.*

*அதற்கு பிரம்மதேவன், '**இந்தத் தேவர்களிடமே உங்களுக்கு இருப்பிடம் அளிக்கிறேன். அவர்களின் உணவில் பங்குதாரராகவும் ஆக்குகிறேன்**' என்றார்.*

*அதனால், எந்த தேவனுக்கு உணவு அளிக்கப்பட்டாலும், பசியும் தாகமும் அதில் பங்கேற்கின்றன.*

*உபநிஷதங்களின் மொழி மிகவும் புராதனமானது, பூடகமானது. எனவே சில பகுதிகளின் பொருள் என்ன என்பதைச் சரியாக அறிந்துகொள்ள முடியவில்லை.*

*இதன் காரணமாக இந்த மந்திரங்கள் பல இடங்களில் புதிர் போலக் காணப்படுகின்றன.*

*ஆனால் முதல் மற்றும் இந்த அத்தியாயங்களுக்கிடையில் ஒரு தொடர்பைக் காண முடிகிறது.*

*1:1:4 இல் பிரம்மதேவனிடமிருந்து இயற்கையின் பல்வேறு அம்சங்கள் தோன்றியதைக் கண்டோம். இயற்கையின் அதே அம்சங்கள் எதிர்வரிசைக் கிரமத்தில் மனிதனில் புகுவதாக கூறப்படுகிறது.*

*உதாரணமாக பிரம்மதேவனின்* **'வாயில் இருந்து பேச்சு வெளிவந்தது. பேச்சிலிருந்து நெருப்பு வந்தது.'** *(1:1:4), தேவர்களின், அதாவது இயற்கையின் அம்சமாகிய 'நெருப்பு பேச்சாகி வாயில் புகுந்தது.' (1:2:4).*

*இறைவனிலிருந்து பிரம்மதேவன், பிரம்மதேவனிலிருந்து இயற்கை, இயற்கையிலிருந்து மனிதன் என்று படைப்பு நிகழ்ந்ததாக நாம் கொள்ளலாம்.*

*படைப்பில் மனிதன் சிறந்தவன் என்ற கருத்தையும் இங்கே நாம் காண்கிறோம்.*

*1:2:4* ***'மனிதன் சிறப்பாகப் படைக்கப்பட்டவன்'*** *என்கிறது.*

***‘கட்டிடங்களில் தாஜ்மஹால் போல் கோயில்களில் மனிதனே சிறந்தவன்’*** *என்று சுவாமி விவேகானந்தர் கூறுவது இங்கே குறிப்பிடத்தக்கது.*

***(பஞ்ச பூதங்களையும் மனிதனின் பேச்சு, பார்வை, செவித்திறன் போன்றவற்றையும் ஒருங்கிணைக்கும் தன்மை இங்கு நோக்கத்தக்கது.)***

*அண்டத்திலிருப்பதே பிண்டத்திலும் உள்ளது என்பது இங்கு நிரூபணம் ஆகிறது.*

*அத்துடன் உலகிலுள்ள கிட்டத்தட்ட அனைத்து உயிரினங்களுக்கும் பொதுவான ஒரு தன்மை இங்கு கூறப்பட்டுள்ளது.*

*உணவு பசிக்கும், நீர் தாகத்துக்கும் உரிய நிவாரணத்தை அளிக்கிறது. மீன் போன்ற சில உயிரினங்களுக்கு தாகம் உடல் நீரை உறிஞ்சி எடுப்பதன் மூலம் தணியலாம். ஆனால் மனிதனும், மிருகங்களும் இந்த இரண்டின் அடிப்படையின்றி வாழ முடியாதவர்கள்.*

*உணவின்றி ஒருவன் நீரை மட்டுமே பருகி வாழ இயலாது. நீரின்றி ஒருவன் உணவை மட்டுமே உண்டும் வாழ இயலாது. இந்தத் தன்மை பலவேறு நூல்களில் கூறப்பட்டுள்ளது.*

*‘**தேஹம் அன்னமயம்**’ என்ற வேத வாக்கியம் கூட அன்னம் என்ற சொல் நீரையும் இணைத்து சொல்லப்பட்ட ஒன்றுதான்.*

***(ஐதரேய உபநிஷதத்தின் முதல் அத்தியாயத்தின் இரண்டாம் பகுதி நிறைவு பெற்றது).***

*இனி மூன்றாம் பகுதியில் மேலும் காண்போம்!.*

## *(பகுதி - 3)*

***உணவைப் படைத்தார்:***

**************************************

*கடவுள் உலகைப் படைத்து, அதனை வழிநடத்த தேவ சக்திகளையும் படைத்து மனிதனையும் படைத்ததை கவிதை நயத்துடன் இந்த அத்தியாயம் விளக்குகிறது.*

***ஸ ஈக்ஷதேமே நு லோகாச்ச லோகாபாவாச்ச அன்னமேப்ய: ஸ்ருஜா இதி (1)***

*பொருள்:*

*---------*

*‘**உலகங்களையும் அதன் காவலர்களையும் படைத்து விட்டேன். இனி அவர்களுக்கு உணவை உண்டாக்குவேன்**’ என்று கடவுள் நினைத்தார்.*

*ஸோஅபோஅப்யதபத் தாப்யோஅபிதப்தாப்யோ மூர்த்திரஜாயத | யா வை ஸா மூர்த்திரஜாயதான்னம் வை தத் (2)*

*பொருள்:*

*---------*

*கடவுள் தண்ணீரைப் பற்றி சிந்தித்தார். தண்ணீரிலிருந்து ஓர் உருவம் தோன்றியது.*

*அது உணவே.*

*(இயற்கையின் படைப்பியல் பற்றி விளக்கும் ஸ்லோகங்களாக இவை உள்ளன.)*

*பகுத்தறிவு வாதமான எல்லாம் இயற்கை என்பது இங்கே அடிபட்டுப் போகும்.*

*குழந்தை இயற்கை அல்ல, யாரோ இருவரால் உருவாக்கப்பட்டது. ஓவியம் இயற்கையல்ல யாரோ ஒரு கலைஞரால் வரையப்பட்டது. இசை இயற்கையல்ல. சப்தஸ்வரங்களை பலரும் விரித்து உருவாக்குவது!!*

*அட, பகுத்தறிவு பற்றி அறியாமல் பேசுகின்ற முட்டாள் மனிதனே இத்தனை சிறிய படைப்புகளுக்குமே படைப்பாளி என்றொருவன் இருக்கையில் இத்தனை பிரம்மாண்டமான, இதை விடப் பிரம்மாண்டமாக எதுவுமற்ற இந்த பிரபஞ்சம்*

*மட்டிலும் எப்படிப் படைப்பாளியின்றி தானாக இருக்கக் கூடும்??*

***'நீரின்றி அமையாது உலகு'*** *என்ற வள்ளுவன் வாக்கு இங்கு வெளிப்படுத்தப் படுகிறது.*

*பிரபஞ்சம் முழுதிலும் உள்ள பற்பல கிரகங்களும் உயிர்களின்றி இருப்பது ஏன்?*

*அங்கு நீர் இல்லாத காரணத்தால் தான்!*

*இன்னமும் சில கிரகங்களில் நீர் பனிக்கட்டியாக உறைந்து நிற்கும். அங்கும் கூட உயிரினங்கள் இருப்பதில்லை! நீர் என்றால் வடிவில் வராத நீர்!! பிரவாகமெடுத்து ஓடக் கூடிய நீர். அவ்வாறு உள்ள நீர் சரியான ஈரப் பதத்துடன் உள்ள ஒன்று.*

*அந்த நீர் நீராக இல்லாமல் ஏதேனும் சிறிது ஈரப்பதமாக எங்கேனும் பாறையிடுக்கில், மண்ணில் பொதிந்திருந்தால் போதும்!!*

*அங்கு தானாக நுண்ணுயிரிகள், செடிகள், விருட்சங்கள் போன்றவை தோன்றும் என்பது உயிரியல் கற்றவர்களுக்குத் தெரிந்த ஒன்று.*

*இதைத்தான் இந்த ஸ்லோகத்தில் மறைமுகமாக உணர்த்தப்படுகிறது.*

*பிடிக்க இயலவில்லை:*

*-----------------------*

*ததேததபிஸ்ருஷ்ட்டம் பராஙத்யஜிகாம்ஸத் | தத்வாசாஜிக்ருஷத் தன்னாசக்னோத்வாசா க்ரஹீதும் | ஸ யத்தைனத்வாசா அக்ரஹைஷ்யத் அபிவ்யாஹ்ருத்ய ஹைவான்னம் அத்ரப்ரஸ்யத் (3)*

*பொருள்:*

*---------*

*கடவுள் படைத்த உணவு திரும்பி ஓட ஆரம்பித்தது. மனிதன் அதை வாக்கினால் (கூப்பிடுவது) பிடிக்க முயற்சித்தான். முடியவில்லை.*

*வாக்கினால் பிடிக்க முடிந்திருந்தால் '**உணவு**' என்று சொல்வதாலேயே அவன் திருப்தியடைந்திருப்பான்.*

*(இங்கு வரக்கூடிய ஸ்லோகங்கள் ஓர் அற்புதமான உருவகம். உணவு எதற்குரியது என்பதை இது மறைமுகமாக விளக்குகிறது. அந்தந்த உடலுறுப்புக்குத் பொருந்தும் விஷயங்களால் தான் அதைப் பொறுத்த இயலும் என்னும் உண்மை இங்கு சொல்லப்படுகிறது.)*

*அடுத்தவரின் துன்பத்தைக் கண்டு ஒருவன் கலங்கலாம், அதற்காக வருந்தி அழலாம், அதன் மூலம் துன்பமடைந்தவன் சிறிது ஆறுதலைப் பெற இயலும்!!*

*ஆனால் ஒருவன் அடுத்தவருக்காக உணவு உண்டு அவனுடைய வயிற்றில் உணவு நிரம்பிய உணர்வை ஏற்படுத்த இயலுமா??*

*இல்லை போலித்தனமாக உண்ணாமலேயே '**நான் சாப்பிட்டு விட்டேன்**' என்று சொன்னால் வயிறு நிரம்பிய உணர்வு வருமா??*

***தம் ப்ராணேனாஜிக்ருஷத் தன்னாசக்னோத் ப்ராணேன க்ரஹீதும் | ஸ யத்தைனத் ப்ராணேன அக்ரஹைஷ்யத் அபிப்ராண்ய ஹைவான்னம் அத்ரப்ஸ்யத் (4)***

*பொருள்:*

*---------*

*ஓட முயற்சித்த உணவை மனிதன் முகர்வதன் மூலம் பிடிக்க முயற்சித்தான். முடியவில்லை.*

*முடிந்திருந்தால் உணவை முகர்வதலேயே அவன் திருப்தி அடைந்திருப்பான்.*

***தச்சக்ஷுஷாஜிக்ருஷத் தன்னாசக்னோச்சக்ஷுஷா க்ரஹீதும் | ஸ யத்தைனத் சக்ஷுஷா அக்ரஹைஷ்யத் த்ருஷ்ட்வா ஹைவான்னம் அத்ரப்ஸ்யத் (5)***

*பொருள்:*
*---------*

*ஓட முயற்சித்த உணவை மனிதன் பார்வையால் பிடிக்க முயற்சித்தான்.*

*முடியவில்லை. பார்வையால் பிடிக்க முடிந்திருந்தால் உணவைப் பார்ப்பதாலேயே அவன் திருப்தியடைந்திருப்பான்.*

*எதனாலும் இயலவில்லை:*
*---------------------------*

*தச்ச்ரோத்ரேணாஜிக்ருஷத் தன்னாசக்னோத் ச்ரோத்ரேண க்ரஹீதும் | ஸ யத்தைனத் ச்ரோத்ரேண அக்ரஹைஷ்யத் ச்ருத்வா ஹைவான்னம் அத்ரப்ஸயத் (6)*

*பொருள்:*
*---------*

*ஓட முயற்சித்த உணவை மனிதன் கேட்பதன் மூலம் பிடிக்க முயற்சித்தான், முடியவில்லை. கேட்பதால் பிடிக்க முடிந்திருந்தால் உணவைப் பற்றி பேசுவதைக் கேட்பதாலேயே அவன் திருப்தி அடைந்திருப்பான்.*

*தத் த்வசாஜிக்ருஷத் தன்னாசக்னோத் த்வசா க்ரஹீதும் | ஸ யத்தைனத் த்வசா அக்ரஹைஷ்யத் ஸ்ப்ருஷ்ட்வா ஹைவான்னம் அத்ரப்ஸ்யத் (7)*

*பொருள்:*
*---------*

*ஓட முயற்சித்த உணவை மனிதன் தொடு உணர்ச்சியால் பிடிக்க முயற்சித்தான்.*

*முடியவில்லை. தொடு உணர்ச்சியால் பிடிக்க முடிந்திருந்தால் உணவைத் தொடுவதாலேயே அவன் திருப்தி அடைந்திருப்பான் . (அவன் வயிறு நிறைந்து போயிருக்கும்.)*

***தன்மனசாஅஜிக்ருஷத் தன்னாசக்னோன் மனஸா க்ரஹீதும் |***
***ஸ யத்தைனன் மனஸா அக்ரஹைஷ்யத் த்வாத்வா***
***ஹைவான்னம் அத்ரப்ஸ்யத் (8)***

*பொருள்:*
*---------*

*ஓட முயற்சித்த உணவை மனிதன் மனத்தால் பிடிக்க முயற்சித்தான்.*

*முடியவில்லை. மனத்தால் பிடிக்க முடிந்திருந்தால் உணவை நினைப்பதாலேயே அவன் திருப்தி அடைந்திருப்பான்.*

***தச்சிச்னேன அஜிக்ருஷத் தன்னாசக்னோத் சிச்னேன க்ரஹீதும் | ஸ யத்தைனத் சிச்னேன அக்ரஹைஷ்யத் விஸ்ருஜ்ய***
***ஹைவான்னம் அத்ரப்ஸ்யத் (9)***

*பொருள்:*

*---------*

*ஓட முயற்சித்த உணவை மனிதன் குறியின் மூலம் பிடிக்க முயற்சித்தான், முடியவில்லை. குறியின் மூலம் பிடிக்க முடிந்திருந்தால் உணவை வெளிப்படுத்துவதாலேயே அவன் திருப்தி அடைந்திருப்பான்.*

*ததபானேனாஜிக்ருஷத் ததாவயத் | ஸைஷோஅன்னஸ்ய க்ரஹோ யத்வாயுரன்னாயுர்வா ஏஷ யத்வாயு: (10)*

*பொருள்:*

*---------*

*ஓட முயற்சித்த உணவை மனிதன் அபானனால் பிடிக்க முயற்சித்தான்.*

*அப்போது அவனால் பிடிக்க முடிந்தது.*

*அபானன்தான் உணவைப் பிடிக்கிறது. எனவே அபானனே உணவின் மூலம் வாழ்க்கையைத் தாங்குகிறது.*

*பிராண சக்தியின் ஒரு அம்சமே அபானன். வாய் வழியாக உள்ளே செல்கின்ற சக்தி இது.*

*வாய் வழியாக உள்ளே செல்கின்ற உணவை ஏற்றுக்கொண்டு, உரிய அவயங்களுக்குத் தேவையான அளவு பகிர்ந்து அழிப்பது அபானன் ஆகும்.*

*எனவேதான் அபானனால் உணவைப் பிடிக்க முடிந்தது, அபானனே வாழ்க்கையைத் தாங்குகிறது என்று கூறப்பட்டுள்ளது.*

***கடவுள் மனிதனுள் புகுதல்:***

*******************************************



*உலகையும், அதனை வழிநடத்துவதற்காக தேவர்களையும், உணவையும் படைத்த கடவுள் மனிதனில் புக நினைத்தார். எங்கும் நிறைந்தவரான கடவுளே மனிதனில் ஆன்மாவாக உள்ளார் என்பதை, அவர் மனிதனில் புகுந்ததாக, கவிதைநயத்துடன் விவரிக்கின்றன இந்த மந்திரங்கள்.*

*ஸ ஈக்ஷத கதம் ந்விதம் மத்ரீதே ஸ்யாதிதி | ஸ ஈக்ஷத கதரேண ப்ரபத்யா இதி | ஸ ஈக்ஷத யதி வாசா அபிவ்யாஹ்ருதம் யதி ப்ராணேனாபிப்ராணிதம் யதி சக்ஷுஷா த்ருஷ்ட்டம் யதி ச்ரோத்ரேண ச்ருதம் யதி த்வசா ஸ்ப்ருஷ்ட்டம் யதி மனஸா த்யாதம் யத்யபானேனாப்யபானிதம் யதி சிச்னேன விஸ்ருஷ்ட்டமத கோஅஹமிதி (11)*

*பொருள்:*

---------

*கடவுள் நினைத்தார்:*

*******************************

*'நான் இல்லாமல் இது எப்படி இயங்க முடியும்?'*

*எந்த வழியில் நான் இதனுள் புகுவேன்?*

*வாக்கினால் பேசவும், மூச்சினால் சுவாசிக்கவும், பார்வையால் பார்க்கவும், கேட்கும் தன்மையால் கேட்கவும், தொடு உணர்ச்சியால் தொடவும், மனத்தால் நினைக்கவும், அபானனால் ஜீரணிக்கவும், குறியால் வெளிப்படுத்தவும் முடியுமானால் நான் எதற்கு?*

*உடம்பு - உயிர்த் (மனம்+பிராணன்) தொகுதி இங்கு '**இது**' என்று கூறப்பட்டுள்ளது.*

உடம்பும் மனமும் ஜடப்பொருட்கள், இவற்றால் இயங்க முடியாது. இறைவன் மட்டுமே உணர்வுப் பொருள்.

அவரது ஆற்றல் இருந்தால் மட்டுமே உடம்பும் மனமும் இயங்க முடியும்.

மின்விசிறி, பல்பு, மின் அடுப்பு, குளிர்சாதனப் பெட்டி என்று எத்தனையோ பொருட்கள் இருக்கலாம். ஆனால் மின்சாரம் இருந்தால் மட்டுமே இவை அத்தனையும் இயங்க முடியும்.

அது போல், இறைவனின் ஆற்றல் உள்ளே புகுந்தால் மட்டுமே மனமும் புலன்களும் இயங்க முடியும்.

வாய் பேசுகிறது, மூக்கு சுவாசிக்கிறது என்றெல்லாம் கூறினாலும் உண்மையில் இவற்றை செய்வது இறைவனின் சக்தியே.

ஜடப்பொருளாக இருக்கின்ற உடம்பு – உயிர்த் தொகுதியில் எந்த வழியாக நுழைந்து அதை இயங்க வைப்பது என்று கடவுள் நினைத்தார்.

ஒரு மனிதனிடம் உடம்பு+மனம்+பிராணன் ஆகிய அனைத்தும் இருந்தாலும் இவை எல்லாம் ஜடப்பொருட்களே என்கிறது உபநிஷதம்.

*இவற்றை உண்மையில் இயங்க வைப்பது கடவுள் தான்.*

*இதற்கு உதாரணமாக ஒன்றைக் கூற விரும்புகிறேன்.*

*நீங்கள் ஒரு புதிய கார் வாங்க செல்கிறீர்கள். அந்தக் காரில் உங்கள் உடலைப் போல அதன் இஞ்சின் முதலான பாகங்கள் உள்ளன. உங்கள் பிராணனைப் போல அதன் இயக்கம் உள்ளது. பிராணன் உடலில் தங்கியிருப்பது போல இயக்கமும் காருக்குள்ளேயே உள்ளது. உங்கள் மனத்தைப் போல காரின் இயக்கத்தை உணர்த்தும் பல அளவைக் கருவிகள் உள்ளன. சரி அப்படியானால் கார் இயங்கி விடுமா??*



*காரினுள் ஒரு மனிதன் ஏறி அமர்ந்து அதன் சாவியைப் பொருத்தி ஸ்டார்ட் செய்தால்தானே அது இயங்கும்??*

*இப்படியே நம்முடைய உடலுக்குள் இயக்கும் சக்தியாக நாம் கடவுளைக் கொள்ளலாம்.)*

***உச்சியில் நுழைந்தார்:***
*********************************

***ஸ ஏதமேவ ஸீமானம் விதார்யைதயா த்வாரா ப்ராபத்யத | ஸைஷா வித்ருதிர்நாம த்வாஸ்ததேதன்னாந்தனம் | தஸ்ய த்ரய ஆவஸதா: த்ரய: ஸ்வப்னா: | அயமாவஸதோ அயமாவஸதோ அயமாவஸதை இதி (12)***

*பொருள்:*
---------

*உச்சியைப் பிளந்து கொண்டு, கடவுள் அந்த வாசல் வழியாக உள்ளே நுழைந்தார்.*

*அந்த வாசலின் பெயர்* ***வித்ருதி****.*

*அது ஆனந்தத்தின் உறைவிடம். அவருக்கு உறைவிடங்கள் மூன்று.*

*கனவுகள் மூன்று. இது உறைவிடம், இது உறைவிடம், இது உறைவிடம்.*

*உடம்பு - உயிர்த் தொகுதியான ஜடப்பொருளில் இறைவனாகிய உணர்வுப் பொருள் சேரும் போது மட்டுமே வாழ்க்கை நடைபெறும். உடம்பினுள் உச்சந்தலை வழியாக அவர் உள்ளே நுழைந்தார் என்று இந்த மந்திரம் கூறுகிறது.*

**'*இந்த உடம்பு 11 வாசல்களை உடைய நகரம்*'.**

*(புரம் ஏகாதச த்வாரம் - கட உபநிஷதம்) என்கிறது கட உபநிஷதம்.*

*2 கண்கள், 2 காதுகள், 2 நாசித் துவாரங்கள், வாய், தொப்புள், குறி, குதம் மற்றும் உச்சந்தலையிலுள்ள பிரம்ம ரந்திரம் ஆகியவையே அந்த 11 வாசல்கள்.*

*இந்த பிரம்ம ரந்திரத்தை '**இறைவழி**', அதாவது இறைவனை அடைவதற்கான வழி, மீண்டும் பிரபற்றவழி என்று **"தைத்ரீய உபநிஷதம்"** கூறுகிறது.*

**'*இதயத்தின் நாடிகள் நூற்றொன்று*'.**

*அவற்றுள் ஒன்று உச்சந்தலையைப் பிளந்து செல்கிறது. அதன் வழியாக மேலே செல்பவன் மரணமற்ற நிலையை அடைகிறான்.*

*மற்ற நாடிகளின் வழியாக வெளியேறுபவன் பல்வேறு கீழ் உலகங்களில் உழல்கிறான் என்கிறது கட உபநிஷதம்.*

*இதயத்திலிருந்து நூற்றொரு நாடிகள் புறப்படுகின்றன. இவற்றின் மூலமே கட்டளைகள் இடப்படுகின்றன. அனுபவங்கள் பெறப்படுகின்றன.*

*நாடிகள் சாதாரண கண்களுக்குப் புலனாகாதவை. பிரார்த்தனை, தெய்வீக வாழ்க்கை போன்றவை மூலம் தூய்மையும் ஆற்றலும் வாய்ந்த மனத்தினால் மட்டுமே அறியத் தக்கவை.*

*உச்சந்தலையிலுள்ள பிரம்ம ரந்திரத்தின் வழியாக ஒரு நாடி செல்கிறது. இதன் வழியாக உயிரை விடுபவன் மரணமற்ற நிலையை அடைகிறான்.*

*மற்ற நூறு நாடிகளும் மீதி பத்து வாசல்களுள் ஏதாவது ஒன்றில் நிலைபெறுகின்றன. இவற்றின் வழியாக உயிர் வெளியேறினால் மீண்டும் பிறவி வாய்க்கிறது. ஆசையற்ற யோகியால் மட்டுமே பிரம்ம ரந்திரத்தின் வழியாக உயிரை வெளியேற்ற முடியும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.*

***மூன்று கனவுகள்:***

------------------

‘***வித்ருதி***’ *என்றால் பிளக்கப்பட்டது என்று பொருள்.*

*இதுவே பிரம்மரந்திரம். இந்த பிரம்மரந்திரத்தையே இறைவன் புகுந்த வழியாக இந்த மந்திரம் கூறுகிறது.*

***(இறைவன் எவ்வழியே உட்புகுந்து ஆன்மாவாக உரைகிரானோ அதே வழியில் உயிர் வெளியேறும் போது அதனுடன் உறைந்திருந்த ஆன்மாவும் அவ்வழியே சென்று இறைவனுடன் ஒன்றி விடும் அதாவது மோட்சமடையும் என்பது இங்கு நோக்கத்தக்கது)***

*உடம்பு - உயிர்த்தொகுதியாகிய ஜடப்பொருளில் உணர்வு புகுவதையே இறைவன் புகுவதாக இந்த மந்திரம் கூறுகிறது.*

*உடம்பு - உயிர்த் தொகுதியாகிய ஜடப்பொருளில் எப்போது உணர்வு புகுகிறது?*

*தாயின் கருவில் இருக்கும்போது.*

*தந்தையின் உடலில் விந்துவாக இருக்கும் உயிர்சக்தி தாயின் உடம்பை அடைகிறது. பிறகு சொந்த உடம்பில் தங்குகிறது.*



*தந்தையின் உடம்பு, தாயின் உடம்பு, சொந்த உடம்பு ஆகிய மூன்றும்தான் '**மூன்று உறைவிடங்கள்**' என்று கூறப்படுகின்றன.*

*(தந்தையின் உடலில் இருக்கும் உயிர்சக்தி தந்தையின் உடம்பாகவும், பின்னர் தாயின் கருமுட்டையுடன் இணைந்து கருவாக ஆகும் நிலையில் தாயின் உடம்பாகவும் அதன் பின்னர் கரு வளரும் நிலையின் தன்னுடைய சொந்த உடம்பாகவும் சொல்லப்படுகிறது.)*

*'**மூன்று கனவுகள்**' என்றால் மூன்று நிலைகள்.*

***விழிப்பு, கனவு, ஆழ்ந்த தூக்கம்** என்று மூன்று நிலைகளில் மனிதன் வாழ்கிறான்.*

*இதுவே '**மூன்று கனவுகள்**' என்று கூறப்பட்டது.*

*மூன்று நிலைகளையும் கனவு என்று குறிப்பிடுவது கருத்தில் கொள்ளத்தக்கது.*

***இங்கு வாழும் வாழ்க்கை முழுவதுமே ஒரு கனவு!!***

*எப்படி நாம் உறங்கி எழுந்த பின் கனவில் வந்தவை நமக்கு மசமசவென்று மங்கலாக தொடர்பின்றி நினைவில் வருகிறதோ அதே போல்தான் நாம் இறந்த பின்பு உள்ள ஆத்மாவுக்கும் நாம் வாழ்ந்த வாழ்க்கை நினைவில் நிற்கும்!! இது எதுவரை நினைவில் நிற்கும்? அடுத்த பிறவிக்காக ஏதேனும் ஒரு உடலிடம் புகுந்து வளர்ந்து வரும் போதும்*

நினைவில் இருக்கும்!! எப்பொழுது தாயின் கருப்பையில் இருந்து வெளிவரத் தலைப்பட்டு வெளி வருகிறதோ அந்த ஒரு வினாடியில் அனைத்தும் மறந்து போகுமாறு தேவ ரகசியம் வடிக்கப்பட்டுள்ளது.

நிலையாமை என்ற பண்பே கனவை நிர்ணயிக்கிறது. கனவிலிருந்து விழித்தால் கனவில் கண்டவிஷயங்கள் அனைத்தும் இல்லாமல் போய் விடுகின்றன. ஆழ்ந்த தூக்கத்தில் இருந்து விழிக்கும் போது, அந்த நிலையில் நாம் பெற்ற இன்பம் மறைந்து விடுகிறது.

அது போலவே, இன்று நாம் விழப்பு நிலை என்று கருதுகின்ற நிலையும் இறையனுபூதி பெறும் போது மறைந்து விடுகிறது.

__அனுபூதி:__
***********

மனிதன் கனவுமயமான இந்த உலகை நாடாமல், தன சொந்த இயல்பான ஆன்மாவை நாடி அனுபூதி பெற வேண்டும் என்று இந்த மந்திரம் கூறுகிறது; அனுபூதியின் விளைவையும் தெரிவிக்கிறது.

*ஸ ஜாதோ பூதான்யபிவ்யைக்யத் கிமிஹான்யம் வாவதிஷதிதி |*
*ஸ ஏதமேவ புருஷம் ப்ரஹ்ம ததமமபச்யத் | இதமதர்சமிதீ 3*
*(13)*

*பொருள்:*

---------

*மனிதனாகப் பிறந்த அவன் மற்ற உயிரினங்களைப் பற்றி ஆலோசிக்கத் தொடங்கினான்.*

*ஆலோசிப்பதற்கு வேறு என்ன இருக்கிறது?*

*உடம்பில் உறைகின்ற ஆன்மாவே எங்கும் நிறைந்து கடவுளாக இருப்பதை அவன் கண்டான்.*

***'இதை நான் கண்டுகொண்டேன்'*** *என்று ஆச்சரியத்துடன் கூறினான்.*

***தேடிக் கண்டு கொண்டேன் திருமாலோடு நான்முகனும்,***
***தேடிக் காணாத தேவனை என்னுள்ளே கண்டு கொண்டேன்***
*- அப்பர்.*

*கடவுள் உலகைப் படைத்தார்; அதைக் காப்பதற்காக தேவர்களைப் படைத்தார்*

*(#1). அவர்களுக்கான உணவைப் படைத்தார்*

*(#2). பிறகு உடம்பு-உயிர்த் தொகுதியில் தாமே புகுந்து மனிதனாகப் பிறந்தார்.*

*அவ்வாறு பிறந்த மனிதன் தன அறியாமையால் தன உண்மை இயல்பை மறந்தான். மற்ற*

*உயிரினங்களையும் உலகத்தையும் பற்றி சிந்திப்பதற்கு நாட்களைச் செலவிட்டான்.*

*இதனை இந்த மந்திரத்தின் முதற்பகுதி கூறுகிறது.*

*ஆனால் அறியாமை மறைகின்ற அனுபூதி பெறுகின்ற காலம் வந்தது.*

*அப்போது தன்னுள் உறையும் ஆன்மாவை மனிதன் கண்டான்.*

*அந்த ஆன்மாவே எங்கும் நிறைந்த கடவுளாக இருப்பதையும் கண்டான். மகிழ்ச்சியால்* **'நான் உண்மையைக் கண்டு கொண்டேன்'** *என்று கூறினான்.*

*மந்திரத்தின் கடைசி வார்த்தைக்கு அருகில் 3 என்ற எண் உள்ளது.*

***'தீ'*** *என்ற எழுத்தை மூன்று மாத்திரை நீட்டி உச்சரிக்க வேண்டும் என்பது இதன் பொருள்.*

*அனுபூதி பெற்றதன் காரணமாக எழுந்த ஆனந்தத்தின் எழுச்சியைக் குறிப்பிடுகிறது இது.*

*(இறைத்தேடல் பற்றிய மிகச் சிறந்த விளக்கமாக இதைக் கொள்ளலாம். பண்டைய மனிதன் முதலில் உலகிலுள்ள உயிரினங்களைக் கண்டு வியந்தான்! பின்னர் உலகையும்,*

*சூரியன், சந்திரன் போன்றவற்றின் படைப்பையும் கண்டு வியந்தான். இத்தனை இத்தனை பிரம்மாண்டங்களையும் படைத்தது யார் என்னும் கேள்வி அவனுள் எழுந்தது. அவ்வாறு படைத்தவன் யார் என்று தேடியலைந்தான். களைத்துப் போனான். எங்குமே அவன் கிட்டவில்லை. கடைசியில் அவனுக்குள் இருந்த ஆன்மாவிலேயே அவனைப் படைத்தவன் இருந்ததை ஞான அனுபூதியைப் பெற்றதால் உணர்ந்தான். மகிழ்ந்தான்.)*

## *எதையும் விட அருகில் இருப்பவர்:*

*****************************************************

*தஸ்மாதிதந்த்ரோ நாமேதந்த்ரோ ஹ வை நாம | தமிதந்த்ரம் ஸந்தமிந்த்ர இத்யாசக்ஷதே பரோக்ஷேண | பரோக்ஷப்ரியா இவ ஹி தேவா: | பரோக்ஷப்ரியா இவ ஹி தேவா: (14)*

## *பொருள்:*

---------

*கடவுள் இதந்திரன் என்று அழைக்கப்படுகிறார். நிச்சயமாக அவர் இதந்திரன்தான். ஏனெனில் '**இதோ என்று காணப்படுபவராக**' இருக்கிறார் அவர்.*

*அவரை இந்திரன் என்று மறைமுகமாக அழைக்கின்றனர்.*

*ஏனெனில் தேவர்கள் மறைவாக இருப்பதை விரும்புபவர்கள்.*

*வேதகாலத்தில் இந்திரன் தேவர்களுக்குத் தலைவனாக மட்டுமின்றி, தலைமைத் தெய்வமாகவும் கருதப்பட்டான்.*

‘**இந்திரன் தனது மாயசக்தியால் பல தெய்வங்களாக உருவெடுத்தான்**’ *என்பன போன்ற கருத்துக்களை வேதங்களில் காண்கிறோம்.*

*(இந்த்ரோ மாயாபி: பஹுரூப ஈயதே I — ரிக் வேதம்)*

*இந்திரன் அல்ல,* ‘**இதந்திரன்**’ *என்பதே உண்மைப் பெயர் என்று இந்த உபநிஷதம் கூறுகிறது.*

**இதம்+த்ர:** *என்று பிரிகிற இந்தச் சொல்லிற்கு, கடவுள் நம் ஆறில்,* ‘**இதோ**’ *என்று கூறத்தக்க வண்ணம் அருகில், நம்முள்ளே இருக்கிறார் என்பது பொருள். நம்முள் இருக்கின்ற அவரை விட்டுவிட்டு உலகை நாட வேண்டியதில்லை என்பதையும் இந்த மந்திரம் சுட்டிக் காட்டுகிறது.*

*நாம் வாழ்வதற்கான இந்த அழகிய உலகையும், அதைப் பாதுகாக்கவும் நடத்திச் செல்லவும் தேவர்களையும் படைத்த இறைவன் தம்மை எங்கும் வெளிப்படுத்திக் கொள்ளவில்லை.*

*கடவுள் என்ற சொல்* ‘**கடந்து உள் நிற்பவர்**’ *என்று பொருள்படுகிறது.*

*அனைத்திலும் மறைந்திருக்கிறார் அவர். அவரும் சரி, தேவ சக்திகளும் சரி, மறைந்திருப்பதையே விரும்புகின்றனர்.*

*ஏனெனில் தன்னை மறைத்துக் கொண்டு செய்கின்ற செயல்தான் மிகவுயர்ந்த பலனைத் தருகிறது.*

*'இறைவன் தம்மை நன்றாக மறைத்துக் கொண்டிருக்கிறார்; அதாவது செயல் மகோன்னதமாக இருக்கிறது' என்று அற்புதமாக விளக்குகிறார் சுவாமி விவேகானந்தர்.*

*(கொஞ்சம் ஆழ்ந்து சிந்தித்தால் இந்த மறைவுத் தத்துவத்தின் விளக்கம் புரியும். இறைவன் உலகிலுள்ள அனைத்து மக்களுக்கும் அரசன். அவன் இந்தப் பூவுலகில் ஒரு அரசனைப் போல ஒரு அரசவையில் சிங்காதனத்தில் வீற்றிருந்தால் என்ன நடக்கும்? உலகம் இயங்குமா? நாம் சொல்லும் சொர்க்க லோகம், நரக லோகம் போன்ற உலகங்கள் வெளிப்படையாகத் தெரிந்தால் உலகம் இயங்குமா?*

*எல்லா மக்களும் கடவுளின் அவையில் குவிந்து கூட்டம் கூடித் தங்கள் பாவங்களை மன்னிக்கவும் தங்களுக்கு சொர்க்கத்துக்கு இடம் தரவும், தங்களுக்கு நோயில்லாமல் வைத்திருக்கவும் அல்லவா கெஞ்சிக் கொண்டிருப்பார்கள்?*

*அதையே மக்கள் செய்து கொண்டிருந்தால் உலக இயக்கம் என்ன ஆகும்? கடவுள் அதனாலும் கூடத் தன்னை மறைத்துக் கொண்டார் என்றும் கொள்ளலாம்).*

***இத்துடன் ஐதரேய உபநிஷதத்தின் முதலாம் அத்தியாயத்தின் மூன்றாம் பகுதி நிறைவடைந்தது.***

# *அத்தியாயம் – 2*

***உயிரின் பயணம்:***
*****************************

*புற அதிசயங்கள் அனைத்தையும் மிஞ்சும் அதிசயம் ஆகிய உயிர் உருவாதல் பற்றி இந்த அத்தியாயத்தில் காண்கிறோம்.*

*உடல், உயிர் (மனம்+பிராணன்), ஆன்மா ஆகியவற்றின் தொகுதியே மனிதன். தான் செய்த நல்வினை மற்றும் தீவினைப் பயன்களுக்கு ஏற்ப உடல்களை மாற்றியபடி செல்கிற உயிரின் பயணமே வாழ்க்கை. உயிர், பழைய உடலை விடுவது மரணம்.*

*புதிய உடலை ஏற்றுக் கொள்வது பிறப்பு.*

*உடல் தாயிடமிருந்து கிடைக்கிறது. உயிர் தந்தையின் வழியாகத் தாயின் கருப்பைக்குள் புகுகிறது.*

*இந்த உடல்+உயிர்ச் சேர்க்கையில் இறைவன் ஆன்மாவாகப் புகுந்து அதனை இயங்கச் செய்கிறார்.*

*உயிரின் இந்தப் பயணத்தைப் பற்றிய சில கருத்துக்களை இனி காணலாம்.*

*கருத்தரித்தல், முதற்பிறப்பு:*
*****************************************

*(அபக்ராமத (ந்து) கர்பிண்ய:) புருஷே ஹ வா அயமாதிதோ கர்போ பவதி யதேதத்ரேத: | ததேதத் சர்வேப்யோ அங்கேப்யஸ்தேஜ: ஸம்பூதம் ஆத்மன்யேவாத்மானம் பிபர்த்தி தத்யதா ஸ்த்ரியாம் ஸிஞ்சதி அதைனஜ்ஜனயதி ததஸ்ய ப்ரதமம் ஜன்ம: (1)*

*பொருள்:*
-------------

*{கர்ப்பிணிப் பெண்கள் இதைப் படிக்க வேண்டாம்}*

*(கர்ப்பிணிகள் வெளியேறவும்) மனிதன் ஆரம்பத்தில் ஆணிடம் விந்துவாக இருக்கிறான். விந்து என்பது எல்லா உறுப்புகளின் ஆற்றல் திரண்டு உருவாகியது. ஒரு ஆண் இவ்வாறு தன்னில் தன்னைத் (விந்து வடிவில்) தாங்குகிறான். விந்துவை எப்போது பெண்ணில் விடுகிறானோ, அப்போது தன்னைப் (குழந்தையாக) பிறப்பித்துக் கொள்கிறான்.*

*இது அவனது முதற்பிறப்பு.*



*இந்த மந்திரமும், இந்த அத்தியாயத்தில் தொடரும் மந்திரங்களும் உடலுறவு, கருத்தரித்தல் போன்ற கருத்துக்களைக் கூறுகின்றன. இதிலிருந்து சில உண்மைகளை நாம் அறிந்து கொள்கிறோம்.*

*1 '**கர்ப்பிணிகள் வெளியேறவும்**' என்று ஆரம்பத்தில் வருகிறது. எனவே அரச சபை, பண்டிதர் சபை போன்ற பொது இடங்களில் இந்தக் கருத்துக்கள் விவாதிக்கப்பட்டன என்பது தெரிகிறது.*

*2 இத்தகைய எல்லா விவாதங்களிலும் கருத்துப் பரிமாற்றங்களிலும் பெண்கள் கலந்து கொண்டார்கள் என்பது தெரிகிறது.*

*(அக்காலங்களில் பெண்களை அடிமைகளாக வைத்திருக்கவில்லை. குடும்பத் தலைவனாக இருந்த ஆண் அரசனாக இருந்தால் நாட்டு நடப்புக்கள் பற்றியும், அந்தணனாக இருந்தால் ஞானத் தேடலைப் பற்றியும், வைசியனாக இருந்தால் வியாபார நுணுக்கங்கள் பற்றியும், நான்காம் வர்ணத்தவராக இருந்தால் தொழிற்திறமைகள் பற்றியும் மனைவியருடன் விவாதங்கள் செய்தே வந்துள்ளனர். இது பற்றி சிந்திக்கும் போது வேத காலங்களில் பல பெண் ஞானிகளும் இருந்து வந்துள்ளனர் என்பது நமக்குப் புரியும்.)*

*3 பண்டைய சமுதாயம் ஒரு சிறந்த, ஆரோக்கியமான சமுதாயமாக விளங்கியதற்கான முக்கியக் காரணங்களுள் ஒன்றை இங்கே காண்கிறோம்.*

*உடலுறவு, கருத்தரித்தல் போன்றவை சபைகளில் விவாதிக்கப்பட்டன.*




*(அக்காலங்களில் உடலுறவு என்பது வாரிசுகளை உருவாக்கும் முகமாகவே மேற்கொள்ளப்பட்டது என்பது தெளிவு! அக்காலங்களில் மக்கள் தொகை நெருக்கம் மிகக் குறைவாக இருந்ததாலும், எத்தனை குழந்தைகள் பிறந்தாலும் உணவுக்குப் பஞ்சம் இல்லாமல் இருந்ததாலும், அரசனுக்கு அதிகப் போர் வீரர்கள் தேவைப்பட்டதாலும் மக்கள் நிறையக் குழந்தைகளைப் பெற்றுக் கொண்டனர்)*

## *குழந்தை பிறப்பு: (இரண்டாம் பிறப்பு)*

*************************************************************

*(கர்ப்பிணிப் பெண்கள் இதைப் படிக்க வேண்டாம்)*

*ஸா பாவயித்ரீ பாவயிதவ்யா பவதி | தம் ஸ்திரீ கர்பம் பிபர்த்தி I ஸோஅக்ர ஏவ குமாரம் ஜன்மனோ அக்ரேஅதி பாவயதி | ஸ யத் குமாரம் ஜன்மனோ அக்ரேஅதி பாவயதி ஆத்மானமேவ தத்பாவயதி ஏஷாம் லோகானாம் ஸந்தத்யா | ஏவம் ஸந்ததா ஹீமே லோகாஸ்ததஸ்ய த்விதீயம் ஜன்ம (3)*

*பொருள்:*

*---------*

*கருவைப் பாதுகாக்கின்ற பெண் பாதுகாக்கப்பட வேண்டியவள். குழந்தை பிறக்குமுன் அதனைக் கருவாகப் பெண் பாதுகாக்கிறாள். பிறந்த பிறகு, ஆரம்பத்திலும் அதன் பிறகும் தந்தை பாதுகாக்கிறான். அந்தக் குழந்தையைத் தானாகவே எண்ணிப் பாதுகாக்கிறான் அவன். உயிர்களின் சந்ததிச் சங்கிலி தொடர்வதற்காகவே அவன் இவ்வாறு செய்கிறான்.*

*இவ்வுலகம், மறுவுலகம் ஆகிய உலகங்களின் தொடர்பு இவ்வாறு வளர்கிறது.*

*(தாயின் வயிற்றிலிருந்து குழந்தையாகப் பிறப்பது மனிதனின் இரண்டாம் பிறப்பு.)*

*வேத காலங்களில் கர்ப்பிணிப் பெண்டிர் போற்றிப் பாதுகாக்கப்பட்டனர் என்பதை நாம் இதிலிருந்தே புரிந்து கொள்ளலாம். வம்ச விருத்தி அடைய வேண்டும், தன்னுடைய பரம்பரையின் சங்கிலித் தொடர் அறுந்து போகாமலிருக்க வேண்டும் என்பது அக்காலத்து மனிதர்களின் பெருவிழைவு. இப்படி ஒரு மனிதனின் அச்சாக அவனுடைய குழந்தை திகழ்ந்து வம்சத்தை விருத்தி அடைய வைக்கிறது.*

*மரணம்: (மூன்றாம் பிறப்பு)*
*******************************************

***ஸோஅஸ்யாயமாத்மா புண்யேப்ய: கர்மப்ய: ப்ரதிதீயதே | அத அஸ்ய அயமிதர ஆத்மா க்ருதக்ருத்யோ வயோகத: ப்ரைதி | ஸ இத: ப்ரயன்னேவ புனர்ஜாயதே ததஸ்ய த்ருதீயம் ஜன்ம** (4)*

*பொருள்:*
---------

*இந்த உலகில் நற்செயல்களைத் தொடர்வதற்கு மகன் நியமிக்கப்படுகிறான். செய்ய வேண்டியவற்றை செய்த தந்தை வயதாகி இறக்கிறான். இந்த உடம்பிலிருந்து வெளியேறி, மீண்டும் பிறக்கிறான்.*

***இது அவனது மூன்றாம் பிறப்பு.***

*(இதில் மகன் என்றுதானே கூறப்பட்டுள்ளது மகள் என்று இல்லையே என்ற சந்தேகம் சில சகோதரிகளுக்கு வரலாம்.*

*தவறில்லை. இங்குதான் அக்காலத்தில் சொல்லப்பட்ட கோத்திரம் என்பது பொருந்தும். ஒருவனுக்கு மகளாகப் பிறந்தவளும் இன்னொருவனைக் கைப்படிக்கிறாள். அப்படி மணப்பதால் அவள் அவனுடைய கோத்திரத்துக்கு மாறி விடுகிறாள்.*

*தன்னுடைய கணவனுக்கு அவன் செய்யும் கர்மங்களுக்குத் துணையாக அவள் விளங்குகிறாள். தன்னுடைய கணவனின் கோத்திரத்தை விளங்க வைக்கும் கருவை சுமக்கும் உன்னதப் பணியை அவள் செய்கிறாள்.)*

*ஆணும் பெண்ணும் என்றைக்குமே ஒருவரை ஒருவர் சார்ந்துதான் வாழ வேண்டும். இதுதான் இயற்கை நியதி.*

*ஆனால் ஆணின் தன்மைகளும் பெண்ணின் தன்மைகளும் வெவ்வேறானவை. ஒரு ஆண் பெண் குரலில் பாடுவதால் பெண்ணாகி விட முடியுமா? அல்லது ஒரு பெண் ஜீன்ஸ் அணிந்து கொள்வதால், கராத்தே சண்டை போடுவதால் ஆணாகி விட முடியுமா? ஆணின் தனித் தன்மை அவனுக்கே உரியது. பெண்ணின் தனித்தன்மை அவளுக்கே உரியது.*

*ஒரு மனிதனின் மூன்று பிறப்புகளை #1 - 4 மந்திரங்கள் கூறுகின்றன.*

*தந்தையிடமிருந்து தாயிடம் புகுந்தது முதற்பிறப்பு. தாயிடமிருந்து உலகில் பிறந்தது இரண்டாம் பிறப்பு. இந்த உடம்பிலிருந்து வெளியேறி மீண்டும் பிறப்பது மூன்றாம் பிறப்பு.*

*மரணத்திற்குப் பிறகு நல்வினை மற்றும் தீவினை பயன்களை அனுபவிப்பதற்காக மறு உலகத்திற்கு செல்வதையே மூன்றாம் பிறப்பாகக் கொள்ளலாம். அல்லது, மீண்டும் பூமியில் பிறப்பதையே மூன்றாம் பிறப்பாகக் கருதலாம்.*

*தந்தையே மகனாகப் பிறக்கிறான். மகனைத் தனது பிரதிநிதியாக உலகில் விட்டுவிட்டு, தந்தை தனது பயணத்தைத் தொடர்கிறான்.*

*குருகுலத்தில் தகுந்த ஒருவரால் இவை கற்பிக்கப்படுவது பற்றி தைத்திரீய உபநிஷதம் கூறுகிறது. உயிரை உருவாக்குகின்ற இந்த உறவை கீதை தெய்வீகமாகப் போற்றுவதும் இங்கு நினைவு கூறத்தக்கது.*

*இனவிருத்தி என்பது கடவுளின் மிகப் புனிதமான சின்னம். கணவனும் மனைவியும் சேர்ந்து செய்கின்ற ஒரு ஆழமான பிரார்த்தனை. நல்லதோ, தீயதோ செய்வதற்கான பெரும் சக்தி பெற்ற ஒரு உயிரை உலகுக்குக் கொண்டு வரப் போகின்ற பிரார்த்தனை.*

*இது என்ன வேடிக்கையா? அல்லது வெறுமனே நரம்புகளுக்கு திருப்தி அளிக்கின்ற செயலா? மிருகத்தனமான உடலின்ப அனுபவமா? இல்லை, இல்லையென்று ஆயிரம் தடவை சொல்கிறான் இந்து என்கிறார் விவேகானந்தர்.*

*வாழ்க்கையின் அடிப்படை அம்சங்களான இவை பற்றி உரிய வேளையில், உரிய முறைப்படி சிந்திப்பதும் கற்பிப்பதும் செயல்படுவதும் நல்ல சமுதாயம் உருவாக வழிகோலுகின்றன.*

***தம் ஸ்த்ரியா ஆத்மபூயம் கச்சதி யதா ஸ்வமங்கம் ததா தஸ்மாதேனாம் ந ஹினஸ்தி | சாஸ்யைதம் ஆத்மானமத்ர கதம் பாவயதி (2)***

*பொருள்:*
*---------*

*உடலுக்குச் சொந்தமான ஒரு உறுப்பு போல விந்து பெண்ணுடன் ஒன்றுபட்டு விடுகிறது. அதனால் அது அவளைத் துன்புறுத்துவதில்லை. விந்துவாகத் தன்னில் புகுந்த உயிரை அவள் கருப்பையில் பாதுகாக்கிறாள்.*

***கருப்பையின் உள்ளே:***
*************************************

*ததுக்தம் ரிஷிணா - கர்பே நு ஸன்னன்வேஷாம் அவேதமஹம் தேவானாம் ஜனிமானி விச்வா சதம் மா புர ஆயஸீரரக்ஷன்னத: ச்யேனோ ஜவஸா நிரதீயமிதி | கர்ப ஏவைதத் சயானோ வாமதேவ ஏவமுவாச (5)*

*பொருள்:*

*---------*

*அது பற்றி முனிவரால் சொல்லப்பட்டுள்ளது. ‘கர்ப்பத்தில் இருக்கும் போதே நான் தேவர்களின் பிறப்புகள் அனைத்தையும் அறிந்து கொண்டேன். நூறு இரும்புக் கோட்டைகள் என்னைக் காவல் காத்தன. ஒரு பருந்து போல விரைவாக நான் வெளியே வந்தேன்.’*

*கர்ப்பத்தில் படுத்திருக்கும் போதே வாமதேவர் இவ்வாறு கூறினார்.*

*தாயின் கர்ப்பத்தில் இருக்கும்போதே அனுபூதி பெற்றவர் வாமதேவர்.*

*அக்கினி தேவன் முதலான தேவர்களுக்கும் மறுபிறவிகள் உண்டு என்பதை அவர் அப்போது அறிந்து கொண்டார். அதனுடன், தமது முற்பிறவி வினைகளையும் அறிந்தார். எத்தனையோ பிறவிகள் எடுத்து அவை ஒவ்வொன்றிலும் பல்வேறு உடம்புகளைத் தாங்கி வாழ்ந்தார். அந்த உடம்புகளையே இங்கு இரும்புக் கோட்டைகள் என்று அவர் கூறுகிறார்.*

*உடம்பு ஒவ்வொன்றும் ஓர் இரும்புக் கோட்டையாக உயிரைச் சிறைப்பிடித்து வைப்பது போல் வைத்துள்ளன. வலையைக் கிழித்து வெளியேறுகிற பருந்து போல் தாம் இந்தக் கோட்டைகளைக்*

*கடந்து, இந்தப் பிறவியைப் பெற்று அனுபூதி அடைந்ததாக அவர் கூறுகிறார்.*

*நாம் ஒவ்வொருவரும் தாயின் கருவில் இருக்கும்போது, இந்த அனுபவத்தைப் பெறுகிறோம். ஆனால் பூமியில் பிறந்ததும் அதனை மறந்து விடுகிறோம்.*

*ஒன்பதாம் மாதத்தில் எல்லா அங்கங்களும் பூர்த்தியாகிறது. முற்பிறவி நினைவு வருகிறது. புண்ணிய பாவங்களின் நினைவு வருகிறது. ஆனால் பிறந்ததும் கடவுளின் மாயசக்தியால் அவற்றை மறந்து விடுகிறோம் என்கிறது கர்ப்ப உபநிஷதம்.*

***ஸ ஏவம் வித்வான் அஸ்மாத் சரீரபேதாதூர்த்வ***
***உத்க்ரம்யாமுஷ்மின் ஸ்வர்கே லோகே ஸர்வான் காமான்***
***ஆப்த்வாஅம்ருத: ஸமபவத் ஸமபவத் (6)***

*பொருள்:*
*---------*

*வாமதேவர் இந்த உண்மைகளை அறிந்து, உடம்பு அழிந்ததும் சொர்க்கலோகத்துக்கு சென்றார். அங்கே எல்லா ஆசைகளும் நிறைவேறப் பெற்று, மரணமிலா நிலையை அடைந்தார்.*

***(கர்ப்பிணிகள் உரிய இடத்தில் வந்து அமர்க).***

*தாயின் கர்ப்பத்தில் இருக்கும் கருவைப் பற்றிப் பலப்பல விஞ்ஞான ஆராய்ச்சிகள் நடந்தேறிய வண்ணம் உள்ளன. ஆனால் அக்காலங்களில் வாமதேவர் அனுபூதி பெற்றது போலப் பல ரிஷிகள் இது பற்றி உணர்ந்து கூறியுள்ளனர்.*

*அக்காலங்களிலேயே பிரஹலாதன் கதையும், அபிமன்யு கதையும் நம் நாட்டில் விளங்கியிருந்தது நினைவு கூறத்தக்கது.*

*எப்பொழுது தாயின் வயிற்றிலிருக்கும் சிசுவுக்கு அனைத்து அங்கங்களும் பூர்த்தியாகிறதோ அப்பொழுது முதல் அதற்கு நினைவுகள் தோன்றுவதாக இங்கு சொல்வது மிகச் சிறந்த கருத்து!!*

*சரி சிசுதான் தாயின் வயிறென்னும் இருட்டறைக்குள் அவள் உடல் தரும் உணவைத் தொப்புள் கொடி மூலம் அல்லவா பெற்றுக் கொண்டிருகிறது?*

*அப்படியானால் அதன் மனதில் என்ன நினைவு தோன்றக் கூடும்??*

*நினைவுகள் என்பது கண்களால் காண்பதையும் காதுகளால் கேட்பதையும் வைத்தே அமையும். இதில் குழந்தைக்கு காண என்று ஒன்றுமேயிருக்காது. இருட்டறை போல்தான் தாயின் மணிவயிறு இருக்கும். ஆனால் கேட்பதற்கு பல விஷயங்கள்*

*இருக்கும். தாயின் சுற்றுப் புறத்தில் எழும் பல சப்தங்கள் குழந்தையை பாதிப்பதாக சொல்வது இதை வைத்தே!!*

*இதற்காகவே தான் கர்ப்பிணித் தாய்மார்கள் சப்தமாக ஸ்லோகங்களை சொல்லுவதோ, புராணக் கதைகளைப் படிப்பதோ வழக்கம்.*

*இது கருவிலுள்ள சிசுவுக்கு சந்தோஷத்தைக் கொடுக்கும்!!*

*சரி இதையும் தாண்டி அது எதை நினைக்க இயலும்??*

*அந்த ஒன்பதாம் மாதத்திலிருந்து சுமார் இருபது நாட்களுக்கு அதற்கு முற்பிறவி நினைவுதான் கண்டிப்பாக இருக்கும்!!*

*அது குழந்தை வெளிவரும் நேரத்திலிருந்து அகன்று விடும்!*

*இது இறைவனின் மாயாசக்தியால். சிறு குழந்தைகள் உறங்கும் போது மிக அழகாக சிரிக்கும் அல்லவா? சரி அதிகம் வீட்டை விட்டு வெளியுலகைக் காணாத சிசு எதைக் கனவு கண்டு அப்படி சிரிக்கும்?? அதற்கு இறைவன் அதனிடம் வந்து பூவைக் காட்டுகிறார் என்று நம் தாய்மார்கள் சொல்வது ஒரு சிறந்த உருவகமாகக் கொள்ளலாம்.*

# <u>அத்தியாயம் - 3</u>

**உயிரும் ஆன்மாவும்:**
*****************************

*உடம்பு, உயிர் (மனம்+பிராணன்), ஆன்மா என்று பலவற்றின் தொகுதியால் ஆனவன் மனிதன். இந்த மனிதனுக்கும் இறைவனுக்கும் என்ன தொடர்பு என்பதை இந்த அத்தியாயம் ஆராய்கிறது.*

***ஓம் கோஅயமாத்மேதி வயமுபாஸ்மஹே கதர: ஸ ஆத்மா யேன வா பச்யதி யேன வா ச்ருணோதி யேன வா கந்தானாஜிக்ரதி யேன வா வாசம் வ்யாகரோதி யேன வா ஸ்வாது சாஸ்வாது ச விஜானாதி (1)***

*பொருள்:*
---------

*ஆன்மா என்று நாம் யாரைத் தியானிக்கிறோம்?*

*இருவரில் யார் ஆன்மா?*

*யாரால் பார்க்கிறோமோ, கேட்கிறோமோ, மணங்களை முகர்கிறோமோ, பேசுகிறோமோ, இனிப்பு - கசப்பு என்று பகுத்தறிகிறோமோ அவரே ஆன்மா.*

*உலகின் இயக்கங்கள் கதிரவனால் நடைபெறுகின்றன. ஆனால் கதிரவன் எதிலும் நேரடியாக ஈடுபடுவது இல்லை. அவனது முன்னிலையில் அனைத்தும் நடைபெறுகின்றன.*

*அது போல், ஆன்மா ஒரு சாட்சியாக இருக்க, உயிர் உலகின் இன்பதுன்பங்களை அனுபவிக்கிறது.*

*முண்டக உபநிஷதம் ஓர் உவமையின் மூலம் இந்தக் கருத்தை விளக்குகிறது.*

*'ஓர் மரத்தில் இரண்டு பறவைகள் வாழ்ந்து வந்தன. ஒன்று அந்த மரத்திலுள்ள இனிப்பும், புளிப்பும் கசப்புமான பல்வேறு பழங்களைத் தின்பதும் அதன் காரணமாக இன்ப துன்பங்களை மாறிமாறி அனுபவிப்பதுமாக இருக்கிறது. மற்றொரு பறவை எதையும் தின்னாமல் அமைதியாக அனைத்தையும் பார்த்த வண்ணம் இருக்கிறது. இங்கே, அனுபவிக்கின்ற பறவை ஜீவனையும் மற்ற பறவை ஆன்மாவையும் குறித்து நிற்கிறது.*

*ஸ்ரீராமகிருஷ்ணர் தமது கையில் அடிபட்டபோது கூறினார்:*

*இதனுள் {நம் உடம்பினுள்} இருவர் இருக்கின்றனர். ஒன்று அன்னை ...இன்னொருவர் பக்தனாக இருக்கிறேன். பக்தனுக்குதான் கை உடைந்தது. கை உடைவது போன்ற சுகதுக்கங்கள் உயிருக்கே என்பது இங்கே உணர்த்தப்படுகிறது.*

*பார்ப்பது, கேட்பது போன்ற அனுபவங்கள் உயிருக்கு. ஆனால், பார்ப்பது கேட்பது போன்ற அனுபவங்களுக்கு ஆதாரமாக இருப்பது ஆன்மா. அனைத்திற்கும் சாட்சியாக விளங்குகின்ற அதையே நாம் தியானிக்க வேண்டுமென்று இந்த மந்திரம் தெரிவிக்கிறது.*

***ஆன்மாவே ஆதாரம்:***

---------------------

***யதேதத் ஹ்ருதயம் மனச்சைதத் | ஸம்ஜ்ஞானமாஜ்ஞானம் விஜ்ஞானம் ப்ரஜ்ஞானம் மேதா த்ருஷ்ட்டிர் த்ருதிர்மதிர் மனீஷா ஜூதி: ஸ்ம்ருதி: ஸங்கல்ப: க்ரதுரஸு: காமோ வச இதி | ஸர்வாணி ஏவைதாணி ப்ரஜ்ஞானஸ்ய நாமதேயாணி பவந்தி (2)***

*பொருள்:*

---------

*அந்த ஆன்மாவே புத்தியாகவும், மனமாகவும் ஆகியிருக்கிறது.*

*உணர்வு (PERCEPTION), ஆளும் தன்மை, உலக அறிவு, பகுத்தறிவு, அறிவுக் கூர்மை, உள்ளுணர்வு (INSIGHT), மனோதிடம், சிந்தனை ஆற்றல், மனத் தெளிவு, மனக்கலக்கம், நினைவு, நிச்சய புத்தி, தீர்மானம், பிராண சக்தி, ஆசை, இன்ப நாட்டம் என்பவை ஆன்மாவின் பல பெயர்கள் ஆகும்.*

*பேருணர்வுப் பொருளான ஆன்மா அனைத்தையும் கடந்ததாக இருந்தாலும் அனைத்துமாக விளங்குவதும் அதுவே.*

*ஏனென்றால் அதுதான் மனிதனின் அழியாத உணர்வுப் பொருள். உடம்பின் இயக்கங்களாக, மனதின் இயக்கங்களாக அந்த ஆன்மாவே திகழ்கிறது.*

## *ஆன்மாவே இறைவன்:*

---------------------

*ஏஷ ப்ரஹ்மைஷ இந்த்ர ஏஷ பிரஜாபதிரேதே ஸர்வே தேவா*
*இமானி ச பஞ்சமஹாபூதானி ப்ருதிவி வாயுராகாச*
*ஆபோஜ்யோதீம்ஷீத்யேதானி இமானி ச க்ஷுத்ர மிச்ராணீவ |*
*பீஜானி இதராணி சேதராணி சாண்டஜானி ச ஜாருஜானி ச*
*ஸ்வேதஜானி சோத்பிஜ்ஜானி சாச்வா காவ: புருஷா*
*ஹஸ்தினோ யத்கிஞ்சேதம் ப்ராணி ஜங்கமம் ச பதத்ரி ச யச்ச*
*ஸ்தாவரம் ஸர்வம் தத் ப்ரஜ்ஞாநேத்ரம் ப்ரஜ்ஞானே*
*பிரதிஷ்ட்டிதம் ப்ரஜ்ஞாநேத்ரோ லோக: ப்ரஜ்ஞா பிரதிஷ்ட்டா*
*ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம (3)*

## *பொருள்:*

---------

*பேருணர்வுப் பொருளான ஆன்மாவே படைப்புக் கடவுளாகவும், இந்திரனாகவும், படைப்பின் தலைவராகவும், மற்ற தேவர்களாகவும் உள்ளது.*

*பூமி, காற்று, வெளி, தண்ணீர், நெருப்பு ஆகிய ஐந்து அடிப்படை மூலங்களாக இருப்பது அதுவே. சிறிய உயிரினங்களாகவும் உயிர்களாகவும் அதுவே இருக்கிறது.*

*புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி*

*பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகி*

*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*

*வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்*

*செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்*

*எல்லாப் பிறப்பும் பிறந்தி ளைத்தேன் எம்பெருமான்*

— *சிவபுராணம்*— *26-31*

*முட்டையில் தோன்றுபவை, கருப்பையில் தோன்றுபவை, வியர்வையில் தோன்றுபவை, விதையிலிருந்து முளைப்பவை அனைத்தும் அதுவே.*

*குதிரைகள், பசுக்கள், மனிதர்கள், யானைகள் என்று இருப்பவை அனைத்தும் அதுவே. நடப்பவை, பறப்பவை என்று அனைத்து உயிரினங்களும் அசையாத பொருட்களும் ஆன்மாவே.*

*அனைத்தும் ஆன்மாவால் வழிநடத்தப்படுகின்றன. ஆன்மாவில் நிலைபெற்றுள்ளன. உலகமே ஆன்மாவால் வழிநடத்தப்படுகிறது. ஆன்மாவே*

*அனைத்திற்கும் ஆதாரம். பேருணர்வுப் பொருளான அந்த ஆன்மாவே இறைவன்.*

*#2 தனிநபர் நிலையில் ஆன்மா அனைத்திற்கும் ஆதாரம் என்று கூறியது.*

*அதாவது உயிர் – உடல் செயல்பாடுகள் அனைத்திற்கும் ஆதாரமாகத் திகழ்வது ஆன்மாவே என்று கண்டோம்.*

*பிரபஞ்ச நிலையில், பேருணர்வுப் பொருளான அந்த ஆன்மாவே இறைவனாக அனைத்திற்கும் ஆதாரமாக இருப்பதை இந்த மந்திரம் கூறுகிறது.*

*உயிரினங்கள், கல், மண் போன்ற அசையாப் பொருட்கள் என்று பிரபஞ்சமாக விளங்குவது ஆன்மாவே.*

*தனி நபர் நிலையில் ஆன்மாவாக மனிதனுள் உறைகின்ற அதே பொருள்தான் பிரபஞ்ச நிலையில் இறைவனாக, எங்கும் நிறைந்தவராக, அனைத்திற்கும் ஆதாரமாக உள்ளார்.*

'***ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம***' *என்ற மகாவாக்கியத்தை இந்த மந்திரத்தில் காண்கிறோம்.*

*மரணமிலாப் பெருநிலை:*
*****************************************

*(இது ஐதரேய உபநிஷதத்தின் நிறைவுப் பகுதி ஆகும்)*

*பேருணர்வுப் பொருளான ஆன்மாவே இறைவன் என்பதை அனுபூதியில் உணர்பவன் என்ன பெறுகிறான் என்பதை இந்த மந்திரம் கூறுகிறது.*

*ஸ ஏதேன ப்ரஜ்ஞேனாத்மனா அஸ்மால்லோகாத் உத்க்ரம்ய அமுஷ்மின் ஸ்வர்கே லோகே காமானாப்த்வா அம்ருத: ஸமபவத் ஸமபவத் (4)*



*பொருள்:*
*---------*

*பேருணர்வுப் பொருளான ஆன்மாவை உணர்பவன் (உடம்பு வீழ்ந்ததும்) வெளியேறி சொர்க்கலோகத்திற்கு செல்கிறான். அங்கே எல்லா ஆசைகளும் நிறைவேறப் பெற்று, மரணமிலா நிலையை அடைகிறான்.*

*ஆன்மாவை உணர்பவன் மரணமிலா நிலையை அடைகிறான். இவ்வாறு ஆன்மாவை உணர்கின்ற யாரும் மரணமிலா நிலையை அடையலாம் என்பதை உணர்த்தி உபநிஷதத்தின் மூன்றாவது அத்தியாயமும் நிறைவு பெறுகிறது.*

***அமைதி மந்திரம்:***

***ஓம் வாங்மே மனஸி பிரதிஷ்ட்டிதா | மனோ மே வாசி பிரதிஷ்ட்டிதம் | ஆவிராவீர்ம ஏதி | வேதஸ்ய ம ஆணிஸ்த: | ச்ருதம் மே மா ப்ரஹாஸீ | அனேனாதீதேனாஹோா ராத்ரான் ஸந்தாமி | ரிதம் வதிஷ்யாமி | ஸத்யாம் வதிஷ்யாமி | தன்மாமவது | தத்வக்தாரவமது | அவது மாமவது வக்தாரமவது வக்தாரம் ||***

***ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||***

*பொருள்:*

----------

*எனது பேச்சு மனத்தில் நிலைபெறட்டும். மனம் பேச்சில் நிலைபெறட்டும். சுடரொளிப் பரம்பொருளே, என்னுள் ஒளிர்வாயாக. மனம், பேச்சு ஆகிய இருவரும் வேதங்களின் உண்மைகளை எனக்குக் கொண்டு வருவீர்களாக. என்னால் கேட்கப்பட்டவை என்னை விட்டு விலகாதிருக்கட்டும். கற்றவற்றை பகலும் இரவும் நான் சிந்திப்பேனாக. நான் வியாவகாரிக உண்மையை சொல்வேனாக, பாரமார்த்தித உண்மையை சொல்வேனாக, அந்த இறைவன் என்னைக் காக்கட்டும், குருவைக் காக்கட்டும், என்னைக் காக்கட்டும், குருவைக் காக்கட்டும்.*

*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||*

*இத்துடன் ஐதரேய உபநிஷதம் நிறைவு பெறுகிறது.*

***ஓம் தத் சத்!***

